# Al-Haque

*In Urdu:-Sulthanul Vaizeen Al-Quthub As-Sah Muhammad Abdul Quadir Sufi Hazrath Hyderabadi Radiallahu Anhu.*

*In Tamil:-Moulana Moulvi As-Sah,As-Shaik Shaik Abdul Quadir Sufi Hazrath Kahiri Radiallahu Anhu.*

## *அல் ஹக்கு*

**(சந்தேக விளக்க நூல்)**

‘சத்தியம் வந்துவிட்டது. அசத்தியம் அழிந்து விட்டது. நிச்சயமாக அசத்தியம் அழிந்ததாகவே ஆகிவிட்டது என்று (நபியே)சொல்க!’- அல்-குர்ஆன்(17:81)

*வேலூர் பாகியத்துஸ் ஸாலிஹாத் அரபிக் கல்லாரி முன்னாள் முதல்வர் அப்துல் ஜப்பார் ஹலரத் அல்ஹக்கு உர்தூ நூலை அரபியில் மொழியாக்கம் செய்தபோது அந்நூலுக்கு எழுதிய முன்னுரையின்*

## தமிழாக்கம்

அருளாளனும், அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் நாமத்தைக் கொண்டு(ஆரம்பிக்கிறேன்) சலவாத்தும், சலாமும் தூதர்களுக்கெல்லாம் நாயகமானவர் பேரிலும், தூய்மையான அவர்கள் கிளைஞர்கள் பேரிலும், பரிசுத்தமான தோழர்கள் பேரிலும், கூலி கொடுக்கும் நாள் (இறுதி நாள்) வரையிலும் அவர்களைக் கலப்பறுதலோடு பின் தொடர்பவர்கள் பேரிலுமாக இருக்கும்.

‘அல்ஹக்கு’ எனும் நூலின் பிரயோசனம், முஸ்லிம்களுக்கிடையில் அடைய வளைத்தலாவதற்காகவும், அதன் பிரதிபலன் மு.ஃ.மின்களுக்கிடையில் பிரபலமாவதற்காகவும் அதற்கு அரபியில் விளக்கமும், அரபி பாசையில் மொழிப் பெயர்ப்புமாகும். நிச்சயமாக **‘அல்ஹக்கு’** சரியானதும் நேர்மையானதும் வெற்றியானதுமாகும்.

இதை இந்தக்காலத்தில் தஸவ்வுப்-பரமார்த்திக கலையில் இமாமானவர்களும், உண்மையான இரகசியங்களைக் கர்சியாகவும்

அனுபவமாகவும் அறிந்தவர்களும், இக்காலத்து நுண்ணறிவாளரும் சுருதியுக்திக்களை எல்லாம் சேகரித்துக் கொண்டவர்களும் உஸூல், புறூஉ- அடிப்படையான ஞானத்தையும் பொதிந்தவர்களும், கலைகளில் அறிய முடியாமல் மறைவானதுகளையெல்லாம் திரையை நீக்கிக் காட்டுபவர்களும், முடிச்சுகளை எல்லாம் அவிழ்த்து விடக்கூடியவர்களும், குர்ஆனின் சைக்கினைகளை நாகரிகமாக விளக்கி வைப்பவர்களும், புர்கானின் நுணுக்கங்களுக்கு விபரமாக ஆதாரங்காட்டுபவர்களும், உபன்னியாசிகளில் சூரியனை போன்றவரும், உபதேசிகளில் சந்திரனைப் போன்றவரும், பல உன்னத பதவிகளையும், உயர் கீர்த்திகளையும் பெற்றவரும், அனந்த நன்மைகளைப் பூண்டவர்களுமான மவுலானா மவுலவி ஸூபி முஹம்மது அப்துல் காதிர் அவர்கள் அல்லவா கோர்வை செய்திருக்கிறார்கள்! பிழை பொறுத்தருளும்படியான அல்லாஹ் அவர்களின் அருள் ஞான நிழலை, சிறியோர் பெரியோர்களின் சிரங்களின் மேல் நீளமாக்கி வைப்பானாக!.

உர்து மொழியானது வடநாட்டு முஸ்லிம்களில் அனந்தம் பேர்களிடத்தில் புழக்கமான பாஷையாக இருந்ததினால் நூலாசிரியரவர்கள் அதன் பிரயோசனம் அடைய வளைத்தலாவதற்காக வேண்டியும், அவர்களில் எல்லோர்களுமே அதன் ஞான சமூகத்திலிருந்து கிரகித்துக கொள்வதற்காக வேண்டியும், அதை உர்து பாஷையில் கோர்வை செய்தார்கள். கருதப்பட்டது போலவே அது பல தேசங்களிலும் பரந்து பிரபல்யமாகி நல்லவிதமாக அடியார்களிடத்தில் செலவாணியாகி விட்டது.

பிரச்சாரம் தென்னாட்டுக்கு வந்ததும் இங்குள்ளவர்களில் மிகுதமானோர் உர்து அறியாதவர்களாக இருப்பதானால் அவர்கள் அதில் நின்றும் தகை தீர்த்துக்கொள்ள சக்தியில்லாதவர்களாகவும் இருந்தார்கள். ஆகையினால் அவர்களில் உலமாக்களுக்கு அதன் பிரயோசனம் நிரப்பமாவதற்காகவும், அதன் உணவுத்தட்டு அடைய வளைத்தலாவதற்காகவும் அதை அறபியில் மொழி பெயர்த்தேன். ஆனால் அதனுடைய பொருள்கள் விலையுயர்ந்ததாகவும், இந்தக் கலை வல்லுனர்களில் மிகுந்த குதிரை வீரர்கள் அதன் முற்றவெளியளவில் போய்ச் சேரமாட்டார்கள். அல்லாஹுத் தஆலா இந்த நூலாசிரியவர்களுக்கு நற்கூலி கொடுப்பானாக!

அவர்கள் அதன் முகத்தை விட்டு முகமூடியை நீக்கிக் காட்டும்படியான பூரணமான வெளிப்பாடாக அதை வெளியாக்கி இருக்கிறார்கள். அதன் தோற்றத்தை விட்டு திரையை நீக்கும்படியான, விபரமான விளக்கமாக விளக்கி வைத்திருக்கிறார்கள். நூலோ கனம் கொஞ்சமானது. ஆனால் கருத்தில், அலைகள் முத்துக்களை அள்ளி வீசும்படியான சமுத்திரமாக

இருக்கும். மேலும் இதன் புன்முறுவல் சிரித்த முக வசீகரத்தினனால் தன்னளவில் இழுத்துக் கொள்ள, மனதை வசியப்படுத்தக் கூடியதுமாகும்.

ஆகையினால் தென்னாட்டிலுள்ள உலமாக்களில் தஸவ்வுபு, இறுபானுடைய-ஞான அறிவுடைய இரகசியங்களைப் பற்றி ஆசையானவர்களும் அனுபோக இரகசிய ஞானத்தின் சயிக்கினைகளில் நேசம் பூண்டவர்களில் வருசையானவர்களும் இதை நான் தெளிவான அரபி பாசையில் மொழிபெயர்க்கவும், இதன் உகப்பான கருத்துகளுக்கு 'ஹிஜாஸீயீன்'களின் அரபி பாஷையெனும் உடையைக் கொண்டு உடை அணிய வைப்பதையும் என்னிடத்தில் நாடினார்கள். இந்தப் பாரமான கருமமும் வலுப்பமான வேலையும் என்பேரில் மிக வருத்தமான கருமங்களில் நின்றுமுள்ளதாகவும், என்னைப் போன்ற இயலாத திறக்குறைத்தலானவர்கள் பேரில் மிகக் கஷ்டமானதாகவுமிருந்த போதிலும் கட்டளைக்குப் பணியாமல் போக்கு சொல்லி தட்டிக் கழிக்க வாய்ப்பும், நிலைமையின் தேட்டத்தை விட்டும் விரண்டோடுகிற வழியும் எனக்கு கிடைக்கவில்லை. ஆகையினால் என் கை குறுகியதாக இருப்பதையும், இந்தக் கடை வீதியிலே என் கைச்சரக்கு குறைவாக இருப்பதைப் பற்றியும் நான் விண்ணப்பம் செய்வதோடு முயற்சி எனும் காலை விட்டும் துணியை வரிந்து கட்டினேன். முயற்சியாளர்களைப் போன்ளு நானும் முயற்சி செய்தேன். நான் ந்த உகப்பான, அன்பான ஞானக் கலைவல்லுனர்களான அறிஞர்களில் நின்றுமுள்ளவனல்ல.

அறிஞரான நூலாசிரியரவர்களோ, அவர்களின் நூலில் நுண்ணிய விளக்வான்கள் கூட உள்ளபடி அதை எட்டிக் கொள்வதை விட்டு மாட்டாங்கியாகும்படியான அதிநுணுக்கமான இரகசியங்களை எல்லாம் கொண்டு வந்திருக்கிறார்கள். பெரும் பரவான்களும் கூட அதனளவில் சேர்வதை விட்டும் இயலாமலாகும் படியான மூடலான அகமியங்களை எல்லாம் அதில் வைத்திருக்கிறார்கள். பிள்ளையை இழந்துக் கவலையாக இருப்பவளும் அதைக் கேட்டதும் சந்தோஷமாகி விடுவாள். அதைக் கிரகிப்பதளவில் காதுக்கு முன்னால் மனம் முந்திவிடும். இஃது அல்லாஹ்வின் வருசையாகும். மனு, ஜின்களில் நின்றும் அவன் நாடியவர்களுக்கே அதைக் கொடுப்பான்.

ஆகவே அவர்கள் விளக்கியது போல நான் எங்ஙனம் விளக்க சக்தி பெறுவேன்? அவர்களுடைய வாசகத்திற்குச் சமமாகும்படியான வாசகம் சொல்ல எனக்கு எப்படி முடியும்? இஃது அசம்பாவிதமேயல்லாதில்லை. அல்லது கனவிலும் கனவேயல்லாதில்லை. எனவே எனது நிலைமையாகிறது, வானத்திலிருப்பதை பூமிக்குக் கொண்டு வந்து 'துரய்யா' எனும் நட்சத்திரத்துடைய சாய்கையை கொக்கில்

எடுத்துரைப்பவனுடைய நிலைமையைப் போன்றதாகும். இதுவே நான் சொல்லக் கூடிய போக்காகும். போக்கு சொல்வது சங்கையான மனிதர்களிடத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டதுவாகும். இதோ நான், கேட்கப்பட்டவனும், ஆதரவு வைக்கப்பட்டவனுமமான அல்லாஹுவின் நல்லுதவியைப் பற்றிப் பிடித்தவனாக ஆரம்பிக்கிறேன்.

## பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே!

கண்ணியமும், புண்ணியமம் நிறைந்த எங்கள் தாதாபீர் இமாமுல் ஆரிபீன், சுல்தானுல் வாயிழீன், பஹ்ருல் ஹகாயிகு வத்தகாயிகு, ரயீஸுல் மஜாதீபு **ஹைதராபாத் ஷாஹ் முஹம்மது அப்துல் காதிர் ஸூபி ஹலரத்** கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள், 'லிபறல் முஸல்மான்' எனும் புனைப் பெயரில் சூபிய்யாக்களை தரக்குறைவாக எழுதிய உர்து கட்டுரைக்கு மறுப்பாக ஓர் கட்டுரை உர்துவில் எழுதினார்கள். நூல் வடிவிலமைந்த அக்கட்டுரைதான் 'அல்ஹக்கு' என்ற இந்நூல்! பேரறிஞர்களை மெஞ்ஞான வழியில் திருப்பி ஞானப் பேரமுதை ஊட்டிய அரிய பொக்கிஷம் இந்நூல்!

இவ்வறிஞர் பெருமக்களில் குறிப்பிடத் தகுந்தவர்களான வேலூர் பாக்கியாத் அரபிக் கல்லூரி முன்னாள் முதல்வர் மௌலானா மௌலவி அல்லாமா அப்துல் ஜப்பார் ஹலரத் (ரஹிமஹுல்லாஹ்) அவர்கள் 'அல்ஹக்கு' எனும் இந்நூலைக் கண்ணுற்று 'இப்படி ஒரு மகான் இக்காலத்தில் உள்ளார்களா?' என வியந்து அவர்களிடம் 'பைஅத்து' எனும் ஞான தீட்சை பெற்று சிஷ்யர்களில் ஒருவராக மாறியதோடு, உர்து தெரியாத தமிழக உலமாக்களுக்கு பயன் தரத்தக்கதாக அந்நூலை அரபியில் மொழிபெயர்த்தர்கள். (அரபி நூலுக்கு அவர்கள் எழுதிய முன்னுரையின் தமிழாக்கத்தை இதில் இடம் பெறச் செய்துள்ளோம்.)

இவ்வுயரிய அல்ஹக்கு என்ற உர்து நுஸலை அப்படியே கருத்து சிதையாமலும் நயம் குன்றாமலும் மிகத் தெளிவாக அனைவரும் விளங்கும் வகையில் எங்களது ஆத்மீக சற்குருநாதர் அல்முஹிப்பிர்ரஸூல் அஷ்ஷெய்குல் காமில் அல் ஆரிபு பில்லாஹி **ஷெய்கு அப்துல் காதிர் ஸூபி ஹலரத்** (கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ்) அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டு, அவர்கள் தமது ஜீவிய காலத்திலேயே பலமுறை வெளியிட முயன்றும் கைகூடாமல் போய்

அன்னாரது ஊழியர்களான நாங்கள் அவர்களது முயற்சியை அவர்களது அருளால் நிறைவு செய்து இதோ உங்கள் கரங்களில் தந்திருக்கிறோம்.

அல்லாஹ் நல்லருள் புரிவானாக! ஆமீன்!

இங்ஙனம்,

**ஹிஸ்புல்லாஹ் ஸபை,**

**ஸூபி மன்ஸில்,**

**காயல்பட்டணம்.**

**அப்துல் ஜப்பார் ஹலரத் அவர்கள் அரபியில் இயற்றிய புகழ் மாலை**

இ∴து பல உயர் பதவிகளையும், கீர்த்திகளையும் பூண்டவர்களும், அனந்த புண்ணிய பாக்கியங்களை பெற்றவர்களுமான மவுலானா மவுலவி ஸூபி முஹம்மது அப்துல் காதிர் அவர்களின் திருச்சமூகத்தளவில் (அனுப்பப்பட்ட) **காணிக்கையாகும்.**

குருவே! ஒலியே! சக்திவாய்ந்த ஆதாரமே!!!

உயர்த்தியான ரப்பு-போஷகன் உங்களுக்கு ஞானத்தைக் குடிப்புக்குப்பின் குடிப்பாக புகட்டி, உங்கள் நெஞ்சை விசாலமாக்கினான்.

ஆகையினால் நீங்கள் அவனுடைய வருசையினால் ஞான சமுத்திரமாக ஆகிவிட்டீர்கள். உங்களின் ஞான சமுத்திரமானது ஆழிய சமுத்திரமாகும்.

உங்கள் சன்னிதானத்தளவில்தான் (ஞானத்தைக் கற்றுக் கொள்வதற்காக) வாகனங்கள் கட்டப்படும். உங்கள் வாயலிலேயே அதிவேகமாகச் செல்லும் ஒட்டகங்களை கால்மடிக்கச் செய்யப்படும்.

நீங்கள் இந்தக்காலத்து அறிஞர்களுக்கு(ஞான) சூரியனாகும். சூரியனுக்கு பிரகாசத்தில் நிகரானது உண்டோ?

ஞான இரகசியங்களெல்லாம் உங்களளவில் வந்து மீள்கிறது. நீங்கள் இரகசிய ஞானங்களைக் கொண்டு பாக்கியம் பெற்றவர்களாகும்.

நீங்கள் தத்துவமுள்ள போஷகனின் (அல்லாஹ்வின் மள்ஹராக-உதயஸ்தானமாகயிருக்கும். நம்முடைய குருநாதர் (முஹிய்யித்தீன் அப்துல்காதிர்)ஜியலி அவர்களின் பெயர் நாமம் சூட்டப்பட்டவர்களாயிருக்கும்.

நீங்கள் ஒரு அரசரோ அல்லது ஒரு பெரியவரோ அல்லது ஒரு தனவந்தரோ கொடுக்காத நாட்டங்களையெல்லாம் எங்களுக்குக் கொடுத்தீர்கள்.

பகைவரின் பேரில் அல்ஹக்கு-சத்தியம் எனும் வாளைக் கொண்டு அடர்ந்தேறி, அழிச்சாட்டியக்காரன் செய்த ஆட்சேபனை(ச்சேனைகள்) அத்தனையையும் விரட்டி முறியடித்தீர்கள்.

உங்களில் அவ்லியாக்களின் ஆன்மாக்(களின் அருள்)களெல்லாம் இறங்கியயிருக்கிறது. நீங்கள்(அகத்)தெளிவான ஸூபிய்யான இக்காலத்திய ஜுனைது(ரஹ்மதுல்லாஹி அலைஹி)வாக இருக்கும்.

ஆகவே ஹக்கு சத்தியம் பகல் வெளியானது போல் ஜொலித்துக் கொண்டு வந்தது. அசத்தியம் தலைகுப்புற விழுந்தது. மறைவாக இருந்தது வெளியாகிவிட்டது.

எனவே நீங்கள் தர்க்க வாதத்தில் சிங்கமாகும். 'ஹக்கு-சத்தியம் மிகைக்கவே செய்யும். அது மிகைக்கப்பட மாட்டா'. இந்த வார்த்தையான)து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் சொன்னது போல் உண்மையாகும்.

எப்படி? (மிகைக்காது?) இஃது (இந்த அல்ஹக்கு எனும் நூல்) உங்களின் அழகான, அபூர்வமான கோவையாக இருக்கும். பலமான சொல்லாகிறது பலசாலி சொன்னதுவேயாகும்.

எனவே(என்) ஆசை மேலீட்டினால் 'அல்ஹக்கு' எனும் நூலுக்கு அழகான அறபி பாசையெனும் உடையை அணிய வைத்தேன்.(அறபியில் மொழி பெயர்த்தேன்)

அதை உங்களளவில் என் மனச் சந்தோஷத்தோடு காணிக்கையாகச் சமர்ப்பிக்கிறேன்.

அதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏற்றுக் கொள்ள நீங்கள் தகுதியானவர்கள்.

(ஏன்) நீங்கள் பக்கீரின் உடையில் கல்பு-அகம் விசாலமான தனவந்தர். இப்படித்தான் நபி சுலைமான் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களும் இருந்தார்கள்.

பலவீனமான எறும்பு அனுப்பிய காணிக்கையைப் போன்று நான் (இதை) காணிக்கையாக அனுப்புகிறேன். நபி (சுலைமான் அலைஹிஸ்ஸலாம்) ஒப்புக் கொண்டது போல நீங்களும் இதை ஒப்புக் கொள்ளுங்கள்.

எங்களின் போஷக(னான நாய)ன் உங்களுக்கு கண்ணியம், சிறப்புகளோடு பல நன்மைகளுடன் உங்களை எங்களில் நேமமாக நிலைத்திருக்கச் செய்வானாக!

உங்களை கால விரோதங்களை விட்டும், தீமைகளை விட்டும் காப்பாற்றி உயர்த்தியான நாயன் உங்களை உங்கள் காலமக்களைக் காண உயர்வாக்கி வைப்பானாக!

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# அல்ஹக்கு

**(சந்தேக விளக்க நூல்)**

نَحْمَدُهٗ تَعَالٰى وَنُصَلِّ عَلَى النَّبِيِّ الْكَرِيْمِ

அருளாளனும் அன்புடையோனுமான அல்லாஹ்வெனும் நாமத்தைக் கொண்டு (ஆரம்பிக்கிறோம்) உயர்த்தியான (அல்லாஹ்) அவனைப் புகழ்கிறோம். இன்னும் சங்கையான நபி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் பேரில் சலவாத்து (ஸலாம்) சொல்கிறோம்.

كَمَا تَدِيْنُ تُدَانُ

**'கமா ததீனு துதானு'**

நீ வழிப்படுவது போன்று (நீ) வழிப்படப்படுவாய்.

ஹிஜ்ரி 1342ம் வருடம் துல்க∴தா மாதம் 11 ம் தேதி சனிக்கிழமை பின்னேரம் 7 மணிக்கு எனது நண்பரொருவர், அந்த வருடம் துல்க∴தா மாதம் 9ம் தேதி வெளியிடப்பட்ட 'றாஸ்'-இரகசியம் என்னும் பத்திரிகையின் பிரதியைக் கொண்டு தந்தார். இன்று சொல்லப்பட்ட மாதத்தின் 12ந் தேதி ஞாயிற்றுக் கிழமை காலை 7 மணி என் கையில் னோ இருக்கிறது. முன்னால், சொல்லப்பட்ட பத்திரிகை! என் மனதில் கருத்துக்களும் பொருட்களும்! 'லிபறல் முஸல்மான் சாகிபு' 14 ம் நூற்றாண்டில் 'அல்லாஹ் அடிமையயாகிவிட்டான்' எனும் தலைப்பில் சில ஆட்சேபணைக் கேள்விகளை எழுதியுள்ளார். அக்கேள்விகளே லிபறல் முஸல்மான் சாகிபுக்கு தஸவ்வுபுடைய இல்மு-பரமார்த்திக ஞானம் தெரியாது. அவர் அதன் அடிப்படைகளையும், பனறுகளையும் அறிய மாட்டார் எனவும் சாட்சியம் கூறுகிறது.

இஸ்லாம் மார்க்கமானது எந்த ஒரு சொள்கையையும், சித்தாந்தத்தையும் ஆராய்ந்தறியாமல், உணராமல் ஆட்சேபணை செய்ய அனுமதிக்கவில்லை. மேலும் தனக்குத்தானே நிகராக உள்ள அந்த மார்க்கத்தின் போதனையும்

إِذَا جَآءَكُمْ كَرِيْمُ قَوْمٍ فَاَكْرِمُوْهُ

**'இதாஜா அகும் கரீமு கௌமின் ப அக்ரிமூஹு'**

'உங்களிடத்தில் ஒரு சமூகத்தாரின் தலைவர் வந்தால் அவரைச் சங்கைப்படுத்துங்கள்'என்று இருக்கிறது.

அரபி, பார்ஸி, உர்து ஆகிய மூன்று பாஷைகளும் இந்தியாவில் முஸ்லிம்களிடத்தில் பேச்சு வார்த்தைகளில் சொந்தமானதாக இருந்து கொண்டிருக்கிறது. அனால், 'லிபறல் முஸல்மான்' என்ற பதம் இந்த மூன்று பாஷைகளின் வட்டத்தை விட்டும் புறம்பானதாக இருக்கிறது. கட்டுரையோ மார்க்கச் சம்பந்தப்பட்டது. குர்ஆன் ஆயத்துகளைக் கொண்டு நிரம்பியது. ஷரீஅத்தின் தீர்ப்புகள் பற்றி கருத்து என்று விவாதம்! ஆனால் எழுதுபவர் ஒரு லிபறல் முஸல்மான். கைசேதம்! இந்தப் பதத்தின் கருத்து என்னவென்று புரியவில்லை. குர்ஆன் ஷரீபு, முஸ்லிம்களில் ஒரு பரிசுத்தமான கூட்டத்தாரை 'லிபறல் முஸல்மான்' எனப் பெயர் வைத்து தெரிந்து கொண்டிருக்கிறதா? அப்படி இருந்தால் தயவுசெய்து லிபறல் முஸல்மான்களின் பரிசுத்தத்தைப் பற்றி விளக்கிக்

காட்டக் கூடிய ஆயத்துகளை ஓதிக்காட்டி எம்மை சீடர்களாக ஆக்கிக் கொள்ளட்டும்! விஷயத்தளவில் மீளுகிறோம்.

أَلَا كُلُّ شَيْءٍ مَا خَلَا اللهَ بَاطِلُ

**‘அலா குல்லு ஷையின் மா ஹலல்லாஹ பாதிலுன்’**

அல்லாஹ் அல்லாதவை அடங்கலும் பாதிலாகும்-இல்லாதவையாகும்.

(கவியின் பிற்பகுதி: وَكُلُّ نَعِيمٍ لَا مَحَالَةَ زَائِلُ

**‘வகுல்லு நயீமின் லா மஹாலத ஸாயிலுன்’**

சகல சௌபாக்கியங்களும் சந்தேகமில்லாமல் நீங்கிவிடும்) எனும் லுபைது கவிஞரின் வார்த்தையை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள்

أَصْدَقُ كَلِمَةٍ قَالَهَا الشَّاعِرُ قَوْلُ لَبِيدٍ

**‘அஸ்தகு கலிமதின் காலஹஷ் ஷாயிறு கௌலு லுபைதின்’**- கவிஞர் சொன்ன வார்த்தைகளிலெல்லாம் மிக்க உண்மையானது லுபைது’ சொன்ன வார்த்தையாகும் என சொல்லி உண்மையாக்கி வைக்கவில்லையா? இந்த ஹதீது புகாரி, முஸ்லிம் கிரந்தங்களில் பதிவு செய்யப்படவில்லையா? ‘ஹக்கு’ என்பதற்கு அகராதியில் பொருள் ‘தாபிது’-தரிபாடானது என்றும், ‘பாதில்’ என்பதற்கு –கைறு தாபிது’-தரிபாடாக இல்லாதது, நிலையற்றது என்றுமில்லையா? ‘பாதில்’ என்பது ஹக்கு என்பதற்கு எதிர் பதமில்லையா? ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் பேச்சை உண்மையாக்கி வைப்பது ஈமானும், அவர்களுடைய பேச்சைப் பொய்யாக்கி வைப்பது குப்றுமில்லையா?

தஸவ்வுபுடைய உலமாக்கள்-பரமர்த்திக ஞானிகள், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களுடைய பேச்சைப்

பின்பற்றி அல்லாஹ் அல்லாதவைகளை ‘நைறு தாபிது’-தரிபாடாக இல்லாதது: நிலையற்றது என்று நம்புகிறார்கள். அதனால் அவர்கள் மு.ஃ.மின்கள், முஸ்லிம்கள் இல்லையா? எவர்கள் உலகத்தை அல்லாஹ் அல்லாதவற்றை தாபிது, முதஹக்கசு –தரிபாடானது, நிலையானது என்று நம்புகிறார்களோ, அதனால் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் உண்மையாக்கி வைத்த அந்த வார்த்தையை பொய்யாக்கி வைப்பது ஏற்படுகிறதோ அவர்கள் மு.ஃ.மின்களாக, முஸ்லிம்களாக ஆகிவிடுவார்களா?

ஸூபியாக்கள் அல்லாஹ்வுடைய வேதம் பூராவையும் கொண்டு ஈமான் கொள்கிறவர்களும், அதன்படி அமல் செய்கிறவர்களுமாவார்கள்.

تُؤْمِنُوْنَ بِبَعْضِ الْكِتَابِ وَتَكْفُرُوْنَ بِبَعْضٍ

**‘து.ஃ.மினூன பி ப.ஃ.ளில் கிதாபி வ தக்புறூன பி ப.ஃ.ளின்’**

‘வேதத்தில் சிலதைக் கொண்டு ஈமான் கொள்கிறீர்கள் சிலதை நிராகரிக்கிறீர்கள்’ என்று சொல்லப்பட்டவர்களில் அவர்கள் சேர்ந்தவர்களில்லை. அவர்கள் உலகத்தை கற்பனையானது என நம்பவும் செய்கிறார்கள். பின்னர் வழிப்படுவது அவசியமானவர்களும், இஸ்லாம் மார்க்கத்தை உண்டுபண்ணியவர்களுமான எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களின் கட்டளைக்குப் பணிந்து உயிரும், மனமும் ஒத்து அதனுடைய ஹுக்முகளையும், ஆதாறுகளையும்-கட்டளைகளையும் குணபாடுகளையும் தொடரவும் செய்கிறார்கள். அவர்களின் பரிசுத்தமான கிரந்தங்களைப் பாருங்கள்! அவர்களின் பரிசுத்தத் தன்மையைப் பற்றியும், அவர்களின் இயக்கத்தைப் பற்றியும் உங்களுக்கு நன்றாக விளங்க வரும்.

லிபறல் சாகிபு ‘அலாகுல்லி ஷையின் மா கலல்லாஹு பாதிலுன்’ என்ற கவியை கூர்ந்து கவனித்துப் பார்த்திருந்தாரேயானால் அருமை நாயகத்தின் பரிசுத்த திருவாக்கை பின் தொடர்ந்து அவருடைய ஆட்சேபனை வாய் அடைபட்டிருக்கும். மேலும் அவருடைய சகல கேள்விகளுக்குமே அழகான விடை அந்த திருவாக்கியத்திலிருந்தே கிடைத்திருக்கும். அவருக்கு மனசாந்தியும், நிம்மதியும் உண்டாயிருக்கும்.

லிபறல் சாகிபு, சங்கராச்சாரியரின் வர்த்தைகளை எடுத்துக் காட்டி இக்காலத்திலுள்ள ஸூபியாக்களின் பேரில் போர் செய்கிறார். ஏதாவது ஒரு நல்ல பேச்சு அல்லது நல்ல வேலை ஹிந்துக்கள், யூதர்கள்,

கிறித்துவர்கள் அல்லது நெருப்பு வணங்கிகளின் வாயிலிருந்தோ அல்லது உறுப்புகளில் இருந்தோ உண்டானால் அது பழிக்கப்பட்டது, இகழப்பட்டது என்று சொல்லிவிட வேண்டுமா?

اَلْحِكْمَةُ ضَالَّةُ الْمُؤْمِنِ حَيْثُ وَجَدَهَا اَخَذَهَا

**‘அல்ஹிக்மது ளால்லதுல் மு.ஃ.மினி ஹைது வஜதஹா அகதஹா’**

‘ஹிக்மது- நல்ல கரும் மு.ஃ.மினுடைய களவு போன கொருள். அதைக் கண்டவிடத்தில் எடுப்பான்’ என்ற பரிசுத்த ஹதீதை விட்டும் முகம் திரும்பிக் கொள்ள வேண்டுமா? ஸுப்ஹானல்லாஹ்!

சங்கராச்சாரியுடைய வார்த்தைகள் நீங்கள் மொழி பெயர்த்தபடி நான்கு வசனங்களின் பேரில் பொதிந்து இருக்கிறது.

**1.** அல்லாஹ் உண்மையானவன். இந்தக் கருத்தை பற்றி இது சங்கராச்சாரியின் வாயிலிருந்து வந்ததனால் உங்களுக்கு ஆட்சேபனையா?

**2.** ஆலம் கியாலி- உலகம் கற்பனையானது. கியால்-கற்பனை என்பது எதார்த்தத்தில் இல்லாமலிருந்து இருப்பதைப் போல் தோன்றுவதாகும். எப்படி கானல் நீரானது தோற்றத்தில் இருக்கிறது, எதார்த்தத்தில் அதற்கு உள்ளமையும், தரிபாடும் இல்லை, என்றாலும் இந்த தோற்றம் அதற்கு ஒரு உள்ளமையைக் கொடுத்திருக்கிறது. அதனாலேயே அதற்கு கானல் நீர் என்று சொல்லப்படுகிறது. இன்னும் அதற்கு ஹுக்முகளும், ஆதாறுகளும்-கட்டளைகளும், குணபாடுகளும் இருக்கிறது. இப்படி இருந்தாலும் அது தரிபாடாக இல்லாததுவாகும்-அசத்தியமாகும்.

இதே மாதிரிதான் ரஸுலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் ‘லுபைது’ புலவரின் ‘அலாகுல்லு ஷையின் மா கலல்லாஹ பாதிலுன்’ என்ற வார்த்தையை ‘உண்மையான வார்த்தை’ என்று சொல்லி உலகத்தைத் தரிபாடாக இல்லாதது-பாதிலு என்று காட்டி இருக்கிறார்கள். சங்கராச்சாரியும் இப்படிச் சொல்லி இருக்கிறார். ரஸுலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்கள் அந்தப் பேச்சை சரி கண்டிருந்தாலும் அது சங்கராச்சாரியின் வாயிலிருந்து வந்துவிட்டதே என்பதற்காக இப்போது அதை மறுப்பது உங்கள் பேரில் கடமையாகிவிட்டதா?

3. ஹூஹுஃ அல்லாஹ்!

4. ஒருவரும் ஹைறு- வேறாக இல்லை.

இந்த இரண்டையும் தான் ஆயுதங்களாக ஆக்கிக் கொண்டு உண்மையான உலமாக்கள் பேரில் போர் தொடுத்திருக்கிறீர்கள். ஆனால் உங்களுடைய இந்த அனாவசியமான போர் உங்களுடைய அறிவின்மையையும், மடமையையும் நிரூபித்துக் காட்டுகிறது என்பதை நீங்கள் அறியவில்லை. ஒரு ஸூபியுமே ஹூஹுஃ அல்லாஹ் என்று நம்ப மாட்டார். அப்படி இருக்க எங்கனம் கண்டிப்பான சடத்தை அல்லாஹ் என்று நம்புவார்?

பாஷையை உண்டு பண்ணி பதங்களுக்குப் பொருள் வைத்தவர், ஒவ்வொரு பதத்தையும் ஒவ்வொரு குறிப்பான பொருளுக்கும், கருத்துக்கும் எதுகையாக வைத்திருக்கிறார். கருத்துக்குப் பதத்தோடு அதைவிட்டும் ஒருபோதும் பிரியாத வித்தில் தொடர்பு இருக்கிறது. பதம், வாயில் வருவதை கேட்டதும் உடனே கருத்து, மனக் கண்ணாடியில் படிந்துவிடுகிறது. அல்லாஹுஃத்தஆலாவுக்கும், உலகாதி அணுக்களுக்குமிடையில் கருத்தில் வேற்றுமை இருக்கிறது என்று தஸவ்வுபுடைய உலமாக்கள் எல்லோருமே சொல்கிறார்கள். மேலும் அதன் ஹுஃக்முகளுக்கும், ஆதாறுகளுக்கும் கட்டுப்பட்டு நடக்கிறார்கள். ஹக்குத்தஆலாவிற்கும் உலகத்தில் உள்ள அணுக்களுக்குமிடையில் ஒற்றுமையின் விதத்தையும், வேற்றுமையின் விதத்தையும் காட்சியாகவும் அனுபவமாகவும் அவர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள். ஒவ்வொன்றின் ஹுஃக்முகளும்,குணபாடுகளும் அவர்களிடத்தில் அலாதியாக இருக்கிறது.

அவர்கள் 'ஜைது' அல்லாஹ் என்றோ, 'அம்று' அல்லாஹ் என்றோ, ஹூஹுஃ' அல்லாஹ் என்றோ அல்லது 'சடம்' அல்லாஹ் என்றோ சொல்லவில்லை. அவர்களிடத்தில் 'தஅய்யுனு'டைய மர்தபா லா தஅய்யுனுடைய மாதபாவை விட்டும்- குறிப்பான மர்தபா, குறிப்பில்லாத மர்தபாவை விட்டும் அலாதியானதாக இருக்கும்.

ہر مرتبہ از وجود حکم دارد ٭ گر فرقِ مراتب نہ کنی زندیقی

**'ஹர் மர்தபா அஸ்வுஜூது ஹுஃக்மே தாரது கர்பர்க மறாதிப் நகுனீ ஸிந்தீகி'**

‘உஜூதுடைய ஒவ்வொரு மற்தபாவுக்கும் ஒரு ஹுக்மு இருக்கிறது. நீ மா்தபாவுக்கிடையில் பாகுபாடு வைக்கவில்லையானால் ஸிந்தீகாய் போய் விடுவாய்’ என்று அவா்கள் போதிக்கிறாா்கள்.

லிபறல் சாகிபுடைய ஆட்சேபனைகள் அவரின் விளங்காத தன்மையினாலேயே உண்டானதாகும். அவா் காமிலான உஸ்தாதிடத்தில் தஸவ்வுபுடைய கல்வியை ஒவ்வொரு பாடம் பாடமாக படிக்க வேண்டும். படித்து விளங்கிய பின் ஏதும் ஆட்சேபனைக்கு இடமிருந்தால் ஆட்சேபனை செய்ய வேண்டும்.

4. யாரும் ஹைறாக – வேறாக இல்லை என்பதாகும். இதுதான் அநேகமாக லிபறல் சாகிபை மிக்க நிம்மதியற்றவராக ஆக்கியிருக்கக் கூடும். காரணம் அது சங்கராச்சாரியின் வாயிலிருந்து வந்திருக்கிறது. இரண்டாவது அது அவரின் கொள்கைக்கும் நம்பிக்கைக்கும் மாற்றமாக இருக்கிறது. ஆனால் லிபறல் சாகிபு தொழுகிறவராக இருந்தால் கட்டாயமாக ‘தக்பீா் தஹ்ரீமா’வுக்குப் பின் முதலாவது தக்பீா் கட்டியபின் தனாவில் ‘ஸுபுஹானகல்லா ஹும்ம..’ என்று ஓதுவதில் ‘லாயிலாஹ ஙைறுக- உனக்கு வேறான நாயன் இல்லை என்று ஓதியேதான் வந்திருப்பாா். லிபறல் சாகிபுடைய கருத்து உள்ளாலுள்ளபடி அமைந்திருக்குமேயானால் இன்னும் சங்கராச்சாரியின் பேரில் பிடிவாதமும் அப்படியே இருக்குமானால் ஒன்று தொழுகையை விட்டுவிடுவாா். அல்லது தௌபா செய்து நல்ல ஸூபியாகிவிடுவாா்.

லிபறல் சாகிபுடைய கேள்விகள் நிா் 3 நீங்கலாக எல்லா கேள்விகளும் ஒரே வகையான கேள்விகளேயாகும். அதன் அடிப்படை ‘ஐனியத்து’ ஙைரிய்யத்து’-‘ஒன்றாக இருப்பது’, வேறாக இருப்பது’ உடைய மஸ்அலாவின் பேரிலேயே இருக்கிறது. லிபறல் சாகிபுடைய புத்தியிலும், விளக்கத்திலும் கொள்கையிலும் இரண்டு வஸ்த்துக்கள் அவைகளுக்கிடையில் ஒன்று மற்றது தானாக இருப்பதும், பின் ஹுக்முகளிலும், ஆதாறுகளிலும் வெவ்வேறாகப் பிரித்துஅலாதியாக இருப்பதுவும் சம்பூரணமான அசம்பாவிதமாகவே இருக்கிறது. அதனாலேயே அவா் எல்லையில்லாமல் திகைத்துக் கொண்டும் தட்டழிந்து கொண்டுமிருக்கிறாா்.

நாம் அல்லாஹ்வின் உதவியினால் அனேக வஸ்துக்களுக்கிடையில் ‘ஐனியத்து ஹகீகி’ ‘ஙைரியத்து வஹ்மி’யை –எதாா்த்தத்தில் ஒன்று மற்றது தானாக இருப்பதையும், கற்பனையில் வேறாக இருப்பதையும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் சூரியனைப் போல் தரிபடுத்தி

விடுவோமேயானால் அந்த பிரகாசிக்கும் சூரிய ஒளியினால் அவர் பிரகாசமுடையவராக ஆகிவிடுவார் என்று ஆதரவு வைக்கிறோம். அஃது அல்லாஹ்வால் முடியாத காரியமல்ல. எனக்கு நல்லுதவி அல்லாஹ்வைக் கொண்டேயல்லாதில்லை. அவனளவிலேயே பரஞ்சாட்டுகிறேன். அவனளவிலேயே மீளுகிறேன். இப்போது நான் கேள்விகளும், விடைகளுமாக எடுத்துக் காட்டுகிறேனே அதில் நீங்கள் சிந்தித்துப் பார்த்து நீதமாக தீர்ப்பு வழங்குவீர்களென்று ஆதரவு வைக்கிறேன்.

ஒரு வஸ்துவுக்கு வேறு வஸ்துவுடன் அல்லது வேறு வஸ்துக்களுடன் உண்டான 'வஜ்ஹ ஐனியத்து' வாகிறது 'வஜ்ஹ ஙைரியத்'தை இது அதுதான் என்பதற்கான புறம் உண்டாயிருப்பதானது இது அதுவல்ல வேறு என்பதற்கான புறத்தை விலக்கக் கூடியதாக ஆகாது. இன்னும் எந்த வஸ்துக்களில் அவைகளுக்கிடையில் 'வஜ்ஹ ஐனியத்து-இது அதுதான் என்பதற்கான விதம் இருக்கிறதோ அவைகளுக்கிடையில் ஏற்றத்தாழ்வு இல்லை. எனினும் எல்லா வஸ்துக்களும் அந்த அவிதத்தில் சம அந்தஸ்துள்ளதேயாகும் என்பதுவும், எல்லா வஸ்துக்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வாகிறது அது நற்கருமத்திலானாலும் சரி கெட்ட கருமத்திலானாலும் சரி அது வஜ்ஹ ஙைரியத்து –வேறானது எனபதற்கான விதத்திலேயாகும்.

உவமையில் ஜெய்து, அம்று, பக்ரு, காலிது ஆகிய நான்கு பேர்களும் கூடப் பிறந்த சகோதரர்கள் பாருங்கள்! இந்த நான்கு பேர்களுக்கிடையிலும் எதார்த்தத்தில் ஒருவர் மற்றவர் தானாக இருக்கிற ஐனியத்து ஹக்கீகியான சம்பந்தங்கள் பல விதத்தினாலும் தரிபடுகிறது. நான்கு பேர்களும் மனிதர்கள். மனிதர் என்ற விதத்தில் ஒருவர் மற்றவர் தானாக இருக்கும். இதேபோல் மஹ்மூதுடைய பிள்ளைகள் என்பதிலும் நாலு பேரும் ஒருவர் மற்றவர் தானாக இருக்கும். இப்படி ஒருவர் மற்றவர் தானாக இருக்கிற விதங்களில் நான்கு பேர்களும் சம அந்தஸ்துடையவர்களாகும். இதில் ஒருவர் வருசையானவர் என்றும், ஒருவர் வருசையில் குறைந்தவர் என்றும் இல்லை. ஜெய்து என்பவன் வருசைக்குரிய காரியங்களைக் கற்றதனால் அவன் ஆலிமாகவும், பாழிலாகவும் ஆபிதாகவும் ஆனான். அம்று என்பவன் இரத்தினக்கல் நோட்டத்தில் தேர்ச்சி பெற்றான். பக்று என்பவன் தச்சு வேலையைக் கற்று தச்சன் என்ற பெயர் வாங்கினான். பாருங்கள்! இந்த நால்வரும் ஒருவர் மற்றவர் தானாக இருந்தவர்கள் இப்போது ஒருவர் மற்றவருக்கு வேறாக ஆகிவிட்டார்கள்.

ஜெயிது என்பவன் பக்று, அம்று, காலிது ஆகிய மூன்று சகோதரர்களை விடவும் வருசையானவனாக இருக்கும். ஏன் அவனுடைய கமால்-திறமை அவனை அல்லாஹ்விடம் முடுகுதலானவனாக ஆக்கிவிட்டது. இரத்தின வியாபாரியான பக்று, தச்சனான அம்று, செம்மானான காலிது ஆகிய இவ்விரண்ட சகோதரர்களை விடவும் வருசையானவனாகும். ஏன்? அவனுடைய கமால் உயர்வானதாகும். தச்சனான அம்று செம்மானாகிய காலிதைப் பார்க்கிலும் வருசையானவன். எல்லா சகோதரர்களிலும் தாழ்ந்தவன் செம்மானாகிய காலிதுவாகும்.

ஜனாப் லிபறல் சாகிப்! செம்மான் காலிதுக்கு அல்லாஹ்விடத்தில் முடுகுதலாகிய ஜெய்துக்குரிய அந்தஸ்த்தைக் கொடுப்பாரா? அவர்களிருவருக்கும் இடையில் இந்த வேற்றுமை இருக்க, அவர்கள் இருவரும் மனிதர்கள் என்றதில் உருவர் மற்றவர் தானாக இருப்பதற்காக இவரோடு அவனையும் சம அந்தஸ்தில் வைப்பாரா? அவர்களுக்கிடையிலுள்ள இத்தியாதி வேற்றுமைகளுக்கு அவரிடத்தில் சொஞ்சமும் மதிப்பு இல்லையா? இதனாலேயே தான் ஷெய்த்தான் சொன்ன 'அனா'-நான் என்பதற்கும் அருவருப்பான மலஜல கிருமிகளுக்கும், தாய், மகள், மகன், மனைவி, மாமி, பாட்டி இவர்களுக்கிடையிலுள்ள- வேற்றுமையின் பேரிலும் அவருக்குத் திகைப்பு ஏற்பட்டிருக்கலாம்.'ஜனியத்தும்'-தானென்பதும் அதனுடைய ஹுக்முகளும், குணபாடுகளும் அலாதியானது என்பதும், ∴.னைரியத்தும் வேறென்பதும், அதனுடைய ஹுக்முகளும், குணபாடுகளும் அலாதியானது என்பதும் அவருக்கு விளங்கவில்லை.

ஜெயிது, அம்று, பக்று, காலிது என்பவர்கள் மஹ்மூதுடைய பிள்ளைகள். இவ்விதத்தில் இந்நால்வரும் ஒருவர் மற்றவர்தானாகவே இருக்கும். இந்த 'ஜனிய்யத்து'டைய-தானென்பதுடைய ஹுக்முகளும், குணபாடும் நால்வர் பேரிலும் ஒன்றுபோல் வரும். தகப்பனாகிய மஹ்மூதுடைய சொத்து, இந்த ஜனியத்தின் புறத்தினால் நான்கு பேர்களுக்கும் சம பாகமாகக் கிடைக்கும். இங்கு ஜெயிதுடைய வருசையும் மேன்மையும் அவருக்கு தகப்பனுடைய அனந்தரத்தில் அதிகமாகக் கிடைக்கச் செய்யாது. அதே போல் செம்மானான காலிதுடைய தாழ்ந்த தொழில் அவனுக்கு தகப்பனுடைய அந்தரத்தில் குறைத்து விடவும் செய்யாது. மேலும் னைரியத்துடைய –வேற்றுமையுடைய வித்தில் என்ன மதிப்பும், அந்தஸ்தும் ஜெயிதுக்கு இருக்கிறதோ அதில் நூற்றில் ஒன்றுகூட காலிதுக்குக் கிடைக்காது.

گر فرقِ مراتب نہ کنی زندیقی

**'கர் பர்க மறாதிப் நகுனீ ஜிந்தீகி'**

'பதவிகளுக்கிடையில் தாரதம்மியம் வைக்காதிருப்பாயானால் ஜிந்தீக்காகி விடுவாய்! என்று சொல்வதற்கு இதுவேதான் கருத்தாகும்.

நன்றாக விளங்கிக் கொள்! அல்லாஹ்வுக்கு நன்றி செய். இதே ஒழுங்கின்படி முஸ்லீம்கள், இந்துக்கள், கிறித்துவர்கள், நெருப்பு வணங்கிகள் எல்லோரும் 'ஹகீகத்து இன்ஸானி'யின்-மானுஷீக அந்தரங்கத்தின் அடிப்படையில் எதார்த்தத்தில் ஒருவர் மற்றவர் தானாகவே இருக்கும். இந்த அடிப்படையில் ஒருவர் மற்றவரைக் காண எந்த வகையிலும் வருசையாக முடியாது. மனித இனம் எல்லோர்களும் மானுஷீக அந்தரங்கத்தில் ஒருவர் மற்றவர் தானாகவேயாகும். அந்த ஒரே மானுஷீக அந்தரங்கமே சகல நபர்களெனும் உடைகளிலும் காட்சியளிக்கிறது.

بنی آدم اعضائے یک دیگرند
کہ در آفرینش زیک جوہرند

**'பனீ ஆதம.்.ளாயே யெக் தீகரந்து**

**கெதர் ஆப்கீனஷ் ஸயெக் ஜவ்ஹறந்து'**

'ஆதமுடைய மக்கள் ஒருவர் மற்றவரின் உறுப்புகளளாகும். ஏன்? அவர்கள் எல்லோரும் ஒரு ஆதாரப் பொருளிலிருந்து படைக்கப்பட்டவர்களாகும்'

ஆனால் வேற்றுமையின் வகைகள் அதாவது கொள்கை சிந்தந்தங்களின் விதர்ப்பங்கள் அவர்களுக்கிடையில் ஒருவருக்கு ஒருவரைக் காண வருசையை, மேம்பாட்டை உண்டாக்கிவிட்டது. ஒவ்வொரு வர்க்கத்தினரும் தங்கள் எண்ணத்தில் மற்றவர்களைக் காணத் தங்களையே வருசையானவர்கள் என்று நம்புகிறார்கள். இந்த ஏற்றத்தாழ்வின் சக்கரம் சுழல்வது 'ஙைரியத்து'-வேற்றுமையின் விதங்களின் பேரிலாகும். 'ஐனியத்'தின் - தானென்பதுவின் பேரிலல்ல என்பது பகிரங்கமானதுவாகும்.

ஜனாப் லிபறல் சாகிபு! ஒரு மர்தபாவின் ஹுக்முகளையும், குணபாடுகளையும் வேளொரு மர்தபாவின் பேரில் சுமத்தாட்டுவது புத்திமான்களான அறிஞர்களின் கருமமல்ல. ஜனியத்துடைய ஹுக்முகளையும், குணபாடுகளையும் ஜனிய்யத்துடைய மர்தபாவின் பேரிலேயே கட்டுப்படுத்தி வையுங்கள். ஙைரியத்துடைய ஹுக்முகளையும், குணபாடுகளையும் ஙைரியத்துடைய மர்தபாவிற்யே சொந்தமாக்குங்கள். பின்னர் இந்த தெளிவான, தூசியில்லாத உதயஸ்தானத்தில் ஞான சூரியனின் ஒளிமுகம் காட்சியளிக்கிறதா இல்லையா? என்று பாருங்கள்!

உவமையில் ஜெய்து எனபவனுக்கு பக்று என்றும், காலிது என்றும் இரண்டு மக்கள் இருந்தார்கள். பக்று என்ற மகனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு பெயர் 'ஹிந்தா'. காலிது என்பவனுக்க ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அவனுக்குப் பெயர் 'ஸாலிம்'. இப்போது ஹிந்தா என்பவளும் ஸாலிம் எனபவனும் இரண்டு பேர்களும் ஜெயிதுடைய பிள்ளைகள் இல்லையா? குர்ஆன் ஷரீபில் 'வலது'-பிள்ளை என்று சொல்வதில் ஆண், பெண் என்று பாகுபாடு காட்டவில்லை.

إِن لَّمْ يَكُن لَّهُ وَلَدٌ

**'இன்லம் யகுன்லஹுூ வலதுன்'**

-அ(ந்த மவுத்தான) வனுக்குப் பிள்ளை இல்லையானால்'

إِن لَّمْ يَكُن لَّهُ وَلَدٌ

**'இன்லம் யகுன்லஹுூன்ன வலதுன்'**

'அ(ந்த மவுத்தான)வளுக்குப் பிள்ளை இல்லையானால் என்பதில் பிள்ளை என்பதை ஆண், பெண் இருவர் பேரிலும் சமமாகவே சொல்லியிருக்கிறது. இன்னும் மகன், மகள், இன்னும் மகனுடைய மகன், மகனுடைய மகள், இன்னும் மகனுடைய மகனுடைய மகன், மகனுடைய மகனுடைய மகள் இப்படியே கீழே போகப்போகப் பேரன் பேத்திகள் எல்லோர்கள் பேரிலும் குர்ஆனின் தீர்ப்புப்படி பிள்ளை என்ற பதத்தைச் சொல்லப்படுகிறது. ஆகவே குர்ஆனுடைய தீர்ப்புப்படி ஹிந்தா என்ற

பெண்ணும் ஸாலிம் என்ற ஆணும் ஜெயிது என்பவனுடைய பிள்ளை என்பதில் சேர்கிறார்கள். ஜெயிதுக்குப் பிள்ளையாக இருக்கிற அம்சம் இரண்டு பேரிலும் சரிசமமாகவே ஊடுருவி இருக்கிறது. இரண்டு பேர்களும் ஜெயிதுக்குப் பிள்ளை என்ற இந்த அம்சத்தில் ஒருவர் மற்றவருக்கு 'ஐனு'ஆக 'தான்' ஆகவே இருக்கிறார்கள். பின்னர் (இப்படியிருந்தும்) ஷரீஅத் அவர்கள் இருவருக்குமிடையில் விவாகம் செய்து கொள்வதை ஆகுமாக்கி இருக்கிறது.

தயவு செய்து இப்போது காட்டுங்கள்! ஹிந்தாவுக்கு ஸாலிமுக்குமிடையில் 'ஐனியத்து' என்ற விதமும் இருப்பதோடு அவர்கள் இருவரும் ஒருவர் மற்றவரை விவாகம் செய்வது ஆகுமானதாகவுமிருக்கிறது. இதுபோலவே தாய், மகள், மனைவியின் தாய் மகனின் மனைவி இவர்களெல்லோர்களும் ஷரீஅத்தில் மனிதர் எனபதில் ஒருவர் மற்றவருக்கு ஐனானவர்களாகவே இருக்கிறார்கள். (அப்படி இருந்தும்) பின்னர் நீங்கள் தாய்க்கும், மகளுக்கும், மனைவிக்குமிடையில் வித்தியாசமும் பாகுபாடும் வைக்கிறீர்கள்.

ஐனியத்து ஹகீகியோடு- எதார்த்தத்தில் தானானதாக இருப்பதோடு ஙைரியத்து இ.்.திபாரியின் கவனிப்பினாலான ஆபாச வேற்றுமையின் ஹுக்முகளுக்கும், குணப்பாடுகளுக்கும் கட்டுப்படுவது உங்களுக்கு ஆகுமானதாகவுமிருக்கும் போது ஸூபிய்யாக்களுக்கு ஆகாதா?

ஸுபுஹானல்லாஹ்! அவசரப்படாதீர்கள்! மஸ்அலா இன்னும் முடிந்து விடவில்லை. முதலாவது

'ஐனியத்து ஹகீகி', ஙைரிய்யத்து இ.்.திபரி' என்பதற்குப் பொருள் என்ன? அதன்பேரில் கவனத்தைச் செலுத்துங்கள்! பிறகு தேட்டத்தளவில் பார்த்துக் கொள்ளலாம்.

பாருங்கள்! மனிதன் சர்வத்தையும் சேர்த்துக் கொண்ட ஒரு அற்புதமான நமூனாவாக-மாதிரியாக இருக்கிறான்.

ஹளறத்து அமீருல் மு.்.மினீன் செய்யிதுனா அலிய்யுல் முர்தளா கர்ரமல்லாஹு வஜ்ஹஹுஷ் ஷரீபு அவர்கள்

أَتَحْسَبُ أَنَّكَ جِرْمٌ صَغِيرٌ
وَفِيكَ انْطَوَى الْعَالَمُ الْأَكْبَرُ

**‘அதஹ்ஸிபு அன்னகஜிர்முன் ஸகீர், வபீகன்தவல் ஆலமும் அக்பறு’**

‘(மனிதனே) நீ உன்னை ஒரு சிறிய சடம் என்று நினைக்கிறாய். உனக்குள்ளே இந்தப் பெரிய உலகமே அமைந்து கிடக்கிறது’ என்று சொன்னது போல் முழு உலகமும் அவனுக்குள் மறைந்து கிடக்கிறது.

மனிதன் உலகத்திலுள்ள ஒவ்வொரு அணுவுக்கும் ஐனாகவே-தானாகவே இருக்கிறான். ஒவ்வொரு அணுவும் மனிதன் தானாகவே ஆகிறது. இந்த ஐனியத்து –தானானதென்பது ஹகீகியாகும்-எதார்த்தமானதாகும், இ∴திபாரி-கவனிப்பாலானது அல்ல.

‘ஜிஸ்மு மஹ்ளு’ என்பதை ‘கலப்பற்ற சடம்’ என்பதை கவனித்துப்பாருங்கள். அதன் சுற்றுதல் நாஸூத்துடைய ஆலம்-ஸ்தூல உலகம் பூறாவின் பேரிலும் இருக்கிறது. இந்த ஆலத்திலுள்ள ஒவ்வொரு அணுவும் சடமாகும்.

மேலும் ஜிஸ்மு மஹ்ளுக்கு-கலப்பற்ற சடத்திற்கு ஐனு ஹகீகி-எதார்த்தமாக தானானதாகவேயாகும். மேலும் இந்தக் கலப்பற்ற சடம் என்ற வித்தில் ஒவ்வொரு அணுவும் மற்ற அணுதானாகவே இருக்கும். மனிதனும் கூட சடமாக இருக்கிற இந்த வித்தில் ஒவ்வொரு அணுதானாகவும், ஒவ்வொரு அணுவும் மனிதன் தானாகவும் இருக்கிறது. ஆனால் இங்கு தானானதாக ஆனதின் விதம், கலப்பற்ற சடமாக இருப்பதன் அந்தரங்கத்தின் விதத்தைக் கொண்டு மட்டுமேயாகும். அதாவது ஆழம், நீளம், அகலம் மூன்றுமிருக்கிற விதத்தில் பார்த்தீர்களானால் மனிதன் கல், மண், தங்கம், வெள்ளி மற்றும் எல்லா நிரஸ வஸ்துகளுக்கும் ‘ஐனாக’-‘தானாக’வே இருக்கிறான். இங்கு தானாக இருக்கிற விதம் நிரஸத்துவ தத்துவமேயாகும். பின்னர், ஹகீகத்து நபாதி-தாவர தத்துவத்தின் விதத்தில் அதாவது வளரக் கூடியது என்ற விதத்தில் மனிதன் சகல தாவர வஸ்த்துகளுக்கும் ஐனாக-தானாக இருக்கிறான். பின்னர் ஹகீகத்து ஹயவானிய்யா-உயிரின் தத்துவத்தின் விதத்தில் மனிதன் சகல உயிரினங்களுக்கும் தானாகவே இருக்கிறான்.

பின்னர் மனிதன் மானுஷீக தத்துவத்தின் விதத்தில் ஹிந்து, முஸ்லீம், கிறித்துவன், யூதன், பாரிசியன் சகல மனிதர்களுக்கும் தானாகவே இருக்கிறான். ஆகையினால் மனிதன் உயிரினம் எனும் தத்துவத்தில் மாடு, குதிரை தானாக ஆனதனால் மனிதன் மாடு அல்ல. அல்லது மாடு மனிதன் அல்ல. அல்லது கல் மனிதனல்ல. அல்லது மனிதன் கல் அல்ல, அல்லது மரம் மனிதனல்ல அல்லது மனிதன் மரமல்ல.

ஜனாப் லிபரல் சாகிபு மனிதன் ஒவ்வொரு அணுவுக்கும் ஜனாகவும் தானாகவும் ஒவ்வொரு அணுவும் மனிதன் தானாகவும் இருப்பதோடு மானுஷீக தத்துவமானது, நிரஸ தத்துவத்தை விட்டும், தாவர தத்துவத்தை விட்டும் அலாதியானதாகும். இன்னும் அவைகளின் குறைபாடுகளை விட்டும் ஹுக்முகளை விட்டும் குணபாடுகளை விட்டும் பரிசுத்தமானதாக இருக்கும். உயிரின் தத்துவத்தில் மனிதனும், கின்ஸீறும்(பன்றியும்) ஒன்று மற்றதின் ஜனாக இருந்தும் மனிதன் கின்ஸீறல்ல-பன்றியல்ல. கின்ஸீா் மனிதனல்ல! மனிதனை கின்ஸீா் என்றும் கின்ஸீறை மனிதன் என்றும் கருதுகிறவன் மடையனாகும்.

இதேபோல் தஸவ்வுபுடைய உலமாக்கள் எதார்த்தத்தில் தீனுக்குத் தூணைப் போன்றவர்கள். இந்தியாவில் இஸ்லாமிய சின்னங்கள் என்னென்ன இருக்கின்றதோ அவைகளத்தனையும் அவர்களின் பரிசுத்த கரங்களினால் செய்யப்பட்டதுவேயாகும். அவைகளைப்பற்றி நாம் உங்களின் 17வது வாசகத்தின் விடையின் கீழ் இன்ஷாஅல்லாஹ் விபரமாக எடுத்துரைப்போம். அதைப்பார்த்து உங்களுக்கு அவர்களின் அந்தரங்கம் தெளிவாக விளங்க வரும்.

خاصّان خدا خدا نبند لیکن ز خدا جدا نبند

**'காஸ்ஸான குதா குதா நயந்து லேகின் ஸகுதா ஜுதா நயந்து'**

'அல்லாஹ்வின் சொந்த அடியார்கள் அல்லாஹ் அல்ல. எனினும் அல்லாஹ்வை விட்டும் வேறுமல்ல!'

சங்கையான ஸூபியாக்கள் சகல மர்தபாக்களையும் அறிவார்கள். ஒவ்வொரு மர்தபாவினுடைய ஹுக்முகளையும், குணபாடுகளையும் வெவ்வேறானதாக உணர்ந்திருக்கிறார்கள். இன்னுமவர்கள் தங்களுடைய பரிபாசைகளைப் பற்றியும் நன்கு அறிந்திருக்கிறார்கள். இன்னும் ஒவ்வொரு மர்தபாவும் அதனதின் ஹுக்முகளோடும், குணபாடுகளோடும் கட்டுண்டது என்றும் அவர்கள் அறிவார்கள். 'ஹயவானிய்யத்'துடைய மர்தபாவின் ஹுக்முகளையும், குணபாடுகளையும் இன்ஸானிய்யத்தின் மர்தபாவில் சுமத்தாட்டவும் மாட்டார்கள். இன்ஸானிய்யத்துடைய மர்தபாவின் ஹுக்முகளையும், குணபாடுகளையும் ஹயவானிய்யத்துடைய மர்தபாவின் பேரில் சுமத்தாட்டவும் மாட்டார்கள். சகல அந்தரங்கத்திற்கும் அந்தரங்கமான 'உஜூது' தானது உலகத்தின் சகல அணுக்களிலும் ஊடுருவியிருப்பது அவர்களுக்குக் காட்சியாகவும், அனுபவமாகவும் வெளியாகி இருக்கிறது. அவர்களின் இந்தக் கொள்கை குர்ஆனைக்

கொண்டும், ஸஹீஹான ஹதீதைக் கொண்டும் கெட்டிப்படுத்தப்பட்டதாகும்.

எப்படி ‘ஹகீகத்துல் ஜிஸ்மு’-சடத்துவமாகிறது உலகத்தின் சர்வ அணுக்களிலும் ஊடுருவியும் இன்னும் ஒவ்வொரு அணுவும் மற்ற அணுவுக்கு ‘ஐனாக’-தானானதாக இருந்தும் அவைகளுக்கிடையில் பிரிந்து வெவ்வேறாகி இருக்கிறதோ அதே போல் ‘ஹகீகதுல் ஹகாயிகு’-அகமியங்களுக்கெல்லாம் அகமியமும், தத்துவங்களுக்கெல்லாம் தத்துவமுமாகிய உஜூது பரம்பொருள் ஊடுருவியிருக்கிற விதத்தில் உலகத்தில் ஒவ்வொரு அணுவும் அவற்றுள் ஒன்று மற்றது தானாகவே இருக்கும். இன்னும் பரம் பொருள் ‘உஜூது’க்கும் தானானதாகவே இருக்கும். என்றாலும்-இப்படி இருந்தாலும் வானத்தையோ பூமியையோ அல்லது மனிதனையோ அல்லாஹ் என்று நம்புவது அவர்களின் கொள்கையல்ல.

எப்படி குதிரை, கழுதையானது உயிரினம் என்ற மர்தபாவில் மனிதன் தானானதாக இருந்தும் மனிதனில்லையோ, இன்னும் மனிதன் மாடு, குதிரை, கழுதை தானானதாக இருந்தும் மாடு. குதிரை, கழுதை இல்லையோ அதேபோல் ஒவ்வொரு அணுவும் உஜூதுடைய மர்தபாவில் ஹக்கு தானானதாக இருந்தும் ஹக்கல்ல! இன்னும் ஹக்கு உஜூதுடைய மர்தபாவில் ஒவ்வொரு அணுவுக்கும் தானானதாக இருந்தும் அணுவல்ல.

லிபறல் சாகிபு இடத்தில் ஐனிய்யத்து ஒவ்வொன்றும் மற்றது தானாக இருப்பது தரிபாடாக ஆனதற்குப் பின் கைரிய்யத்து அவைகளுக்கடையில் வெவ்வேறாக இருப்பதுவாகிறது தரிபாடாக ஆக முடியாததாக இருந்தால் (எப்படி அவர் தாய, மகள், மகனுடைய மனைவி, மனைவியின் தாய், பாட்டி அல்லது அருவருப்பான கிருமிகள், ஷைத்தான் போன்ற உவமானங்களைத் தட்டளிந்தவராக எடுத்துக் காட்டியது போல்) அவருடைய கொள்கை அடிப்படைப்படி சகோதரி, மகனுடைய மனைவி, தாய், மனைவியின் தாய், ஷைத்தான், மலக் கிருமிகள், பன்றி, ஆடு, மாடு, பசு, கோழி, மீன், மச்சம் எல்லாற்றுக்குமிடையிலும் பாகுபாட்டையும், வேற்றுமையையும் தூர வீசி விடட்டும். ஏன் சொல்லப்பட்ட வஸ்துக்களுக்கிடையில் ஒரு விதத்திலில்லாது பல விதங்களில் ஐனியத்து தானாக இருப்பது தரிபாடாக இருக்கிறது. ‘உஜூது’, ‘ஹஸ்தி’யில்-உண்டானது, இருப்பதுவில் ஒன்று மற்றது தானாக இருக்கிறது. சடம் என்பதில் ஒன்று மற்றது தானாக இருக்கிறது. ‘நிரஸப் பொருள்’ என்பதில் ஒன்று மற்றது தானாக இருக்கிறது. பின்னர் மனிதன் எனும் வட்டத்தில் யூதன்,

கிறித்துவன், மஜூஸி, ஷீஆ, ஸுன்னி, தச்சன், மேஷன், தட்டான், கொல்லான், செம்மான், தோட்டி ஆகிய எல்லோரும் தங்களுக்குள் தானானவர்களாகவே இருக்கிறார்கள் என்ற விதத்தைக் கொண்டு எல்லோரும் முஸ்லீம்களா? அல்லது எல்லோரும் காபிர்களா? எல்லோரும் சொர்க்கவாதிகளா? அல்லது எல்லோரும் நரகவாதிகளா? உங்கள் கொள்கைப் பிரகாரம் எந்த வகையான பாகுபாடும் வித்தியாசமும் எஞ்சியிராது. ஏன் அவர்களில் ஐனிய்யத்து-தானாக இருப்பது தரிபாடாக இருக்கிறதே. ஆகயைினால் உங்களின் கொள்கைப் பிரகாரம் சகல மனிதர்களும் சொர்க்கவாதிகளாகவோ அல்லது நரகவாதிகளாகவோ இருப்பது அவசியமானதாகிறது.

தானானதாக இருப்பது தரிபாடான பின் வேற்றுமை உங்களிடத்தில் அசம்பாவிதமாகும்-அசாத்தியமாகும். சாத்தியமானது என்றிருந்தால் நீங்கள் ஷைத்தான், மலக்கிருமிகள், தாய், மகனுடைய மனைவி, மனைவியின் தாய், பாட்டி ஆகிய இவர்களுக்கிடையிலும் ஐனிய்யத்து-தானானதாக இருப்பதைப் பற்றி விண்ணப்பம் செய்வதோடு அவர்களுக்கிடையில் வேற்றுமை வித்தியாசம் இருப்பதையும் ஒப்புக் கொண்டிருப்பீர்கள். இன்னும் இப்படியான ஆட்சேபணைகளையும் உண்டாக்கவு மாட்டீர்கள்.

கேளுங்கள். ஷைத்தான் ‘அனா’-நான் என்று சொன்னது ஷைத்தனாக இருந்த மர்தபாவிலிருந்து உண்டானது. பிர்அவ்ன் அன-நான் என்று சொன்னது பிர்அவ்னாக இருந்த மர்தபாவிலிருன்து உண்டானது. ஹக்கு தஆலா அனா-நான் என்று சொன்னது ஹக்காக இருந்த மர்தபாவிலிருந்து உண்டானது.

கிருமிகளையும், அது படையுண்ட மூலப் பொருளான அசூசிகளையும் நீங்கள் மிகவும் அருவருப்பாக பார்க்கிறீர்கள். அது இந்த மர்தபாவில் அருவருக்கத்தக்கதாக இருப்பதற்கு தகுதியுந்தான். ஆனால் நீங்கள் மறந்து விட்டீர்கள்! ஸுப்ஹானல்லாஹில் அளீமி வபி ஹம்திஹி! அல்லாஹ் ளலூமுன் ஜஹூலுன்- சுத்த அனியாயக்காரன், சர்வ மடையன் என்ற பட்டத்தை மனிதனுக்குக் கொடுத்தது எந்த அளவுக்கு உண்மையாகவும், நேர்மையாகவும் சரியாகவும் இருக்கிறது. மனிதன் இரவில் எதைச் சாப்பிட்டானோ அதைக் காலையில் மறந்து விடுகிறான்.

இந்த அழுக்கு என்ன? மனிதன் இரவில் வாயில் வைத்து சுவைத்து இன்பமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்த மிருதுவான வாசமான உணவுக்கு-ஐனாகவும்-தானானதாகவும், இன்னும் ஐன ஹகீகியாகவும் -எதார்த்தத்தில்

தானானதாகவுமில்லையா? இன்னும் அந்த அழுக்கிலிருந்துதான் இந்தக் கிருமிகள் படைக்கப்பட்டில்லையா? இது உங்களுக்குத் தெரியாதா?

ஜனாபு ஆலி! இந்த அழுக்குக்குள்ளிருந்த ஒரு மிருதுவான சத்தான பாகத்தை உங்களுடைய குடல் எடுத்துக் கொண்டுதான் இதைக் கழித்து விட்டிருக்கிறது. அதுவேதான் இந்த கிருமிகள் ரூபத்தில் வந்திருக்கிறது. அந்த மிருதுவான் சத்துப் பாகந்தான் உங்களின் இந்திரியப் பையில் இந்திரியத்தின் உருவமாகவும், பின்னர் கண்குளிர்ந்த, மனதுக்கு ரம்மியமான குழந்தையாக வந்திருக்கிறது. இந்த அழுக்குக் கிருமிகளும், உங்களுடைய கண்ணின் ஒளியான பிள்ளையும் ஹகீகத்தில் உண்மையில் ஒன்று மற்றது தானானதாகவேயாகும். ஆனால் இஃதிபாரில்-கற்பனைக் கவனிப்பில் வேறானதாக இருக்கும். இந்த உலகம் உருவத்துடைய உலகம். இங்கு உருவத்துடைய அதிகார ஆட்சி செல்லுபடியாகும். எப்படி உருவம் இருக்கிறதோ அதற்குத் தக்கபடியே ஹுக்மும் தீர்ப்புமுண்டு. சந்தேகமில்லாமல் உங்களுடைய கண்குளிர்ந்த மகவுக்கும், அந்த அழுக்கினாலுள்ள கிருமிகளுக்கும் மூலப்பொருள் ஒன்றேதான்! என்றாலும் உருவங்கள் மாறியிருக்கிறது. இதனால்தான் நீங்கள் உங்கள் குழந்தையைக் கண்ணில் வைத்து முத்துவதும், நெஞ்சில் அணைத்துக் கட்டுவதும். அந்தக் கிருமிகளைக் கண்டு வெருட்சியாக இருப்பதும் ஆகுமென்கிறோம்.

ஆனாலும் அது உங்கள் கண் குளிர்ந்த பிள்ளைக்கு ஐன்தானானதுதான் என்று நம்புவது அவசியமாகும். எதார்த்தத்தில் உங்களின் இரவு போசனம் தானாகயிருந்து உருவத்தில் வேறானதாக ஆனதனால் ஹுக்முகளிலும் குணபாடுகுளிலும் வேறானதாகவே இருக்கும். கள்ளும், சிற்காவும் திராட்சையின் சத்துக்கு ஐனஹகீகி-எதார்த்தத்தில் தானாகவே இருக்கும். இது விஷயத்தில் உங்களுக்கும் அபிப்பிராய பேதமுண்டாகாது இருப்பது அவசியம். ஆனால் கள் அல்லது சிற்காவாகிறது திராட்சை ரசத்தை விட்டும் நைரிய்யத்து இஃதிபாரி-கவனிப்பினாலான வேற்றுமையின் புறத்தைக் கொண்டு வேறானதாகும். ஏனென்றால் இப்போது அந்த திராட்சை ரசமானது மஸ்து என்னும் உருவத்தைத் தெரிந்துக் கொண்டிருக்கிறது. அந்த உருவம் ‘ஆரிளு’, ‘காபிலுஸ்ஸவால்’-‘இடையில் வந்தது’-நீங்கிப் போகக் கூடியது.

எந்த ஒரு உருவமானது எந்த ஒரு வஸ்துவின் மூலாதரமான அசல் உருவத்தின் மேல் இடையூறாக வருமோ அந்த உருவத்தை, அது அசல் உருவத்திற்கு நைரிய்யத்து இஃதிபாரி-கவனிப்பினாலான வேற்றுமையைக் கொண்டு வேறானது என்று நாம் நம்புகிறோம். இன்னும் அசல் உருவத்தைக் கவனித்து ஐனிய்யத்து ஹகீகி-எதார்த்தத்தில் தானானது

என்றும் தரிபடுத்துகிறோம். உதாரணமாக மண்ணையும் மண்ணால் செய்யப்பட்ட பாண்டங்களையும் போல். ஒவ்வொரு பாண்டமும் மூலப் பொருளைக் கவனித்து மற்ற பாண்டத்திற்கும் இன்னும் தனது மூலமான மண்ணுக்கும் ஐனு ஹகீககியாக-எதார்த்தத்தில் தானானதாக இருப்பதைக் கொண்டு ஐனாகும்-தானாகும். இன்னும் நைரிய்யத்து இ.்.திபாரியை - கவனிப்பிலான வேற்றுமையைக் கொண்டு நைறாகும் - வேறாகும்.

பாருங்கள்! கள், சிற்காவினுடைய வேற்றுமையான உருவமாகிறது, 'ஐனிய்யத்'தளவில்-தானானதான உருவத்தளவில் மாறிவிடகிறது. எந்த வஸ்து நீங்கிப் போகக் கூடியதாக இருக்கிறதோ அதைக் கற்பனையான உஜூதைக் கொண்டு மவுஜூதானது என்று நாம் சொல்கிறோம். எதார்த்தமான மவுஜூது ம.்.துமாக ஆவது- இல்லாததாக ஆவது அசம்பாவிதமாகும்.

இப்போது நாம் சொல்லிக் காட்டிய உவமானங்களில் நன்றாக சிந்தித்துக் கவனித்துப் பார்த்தீர்களேயானால் நீங்கள் ஐனிய்யத்து ஹகீகியையும், நைரிய்யத்து இ.்.திபாரியையும்-எதார்த்ததில் தானானதாக இருப்பதையும் கற்பனையில் வேறானதாக இருப்பதையும் நல்லவிதமாக விளங்கிக் கொள்வீர்கள். ஆனாலும் நாம் உங்களுக்காக நீங்கள் நன்றாக விளங்கிக் கொள்ள வேண்டுமென்பதற்காக வேண்டி ஐனிய்யத்து ஹகீகி, ஹைரிய்யத்து இ.்.திபாரியைப் பற்றி இதைவிடவும் நல்ல தெளிவாக விளக்கிக் காட்டுகிறோம். நமது இந்த முயற்சி உங்கள் சாந்திக்காக அல்லாஹ்வுக்காக வேண்டிச் செய்கிறதாகும். உங்களுக்கு விடை பகர வேண்டுமென்ற நோக்கத்திற்காகவல்ல. மேலும் இந்த மஸ்அலா பொதுவாக எல்லோருக்கும் விளங்க வேண்டுமென்பதற்காகவுமேயாகும்.

## ஐனிய்யத்து ஹகீகி, நைரிய்யத்து இ.்.திபாரி

முதலாவது நீங்கள் தத்துவக் கலை வல்லுனர்களிடத்தில் ஒப்புக் கொள்ளப்பட்ட சில அடிப்படைக் கொள்கையைப் பற்றி நன்றாக தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் மஸ்அலா இலகுவாக விளங்கி வரும். அவையாவன:

1. மவ்ஜூது ம.்.தூமாகவும், ம.்.தூம் மவ்ஜூதாகவும் ஆகாது. உளதாக இருப்பது இல்லாததாகவும் இல்லாததாக இருப்பது உளதாகவும் ஆகாது.

2. கல்புல் ஹகீகதி முஹாலுன்-எதார்த்த சுயவடிவம் பிரள்வது அசம்பாவிதமாகும்.

3. தாதிய்யாது, தாத்தை விட்டும் நீங்காது- சுய வடிவத்திற்கு அவசியமானவைகள் சுயவடிவத்தை விட்டும் நீங்காது.

4. அ.்.றாளுடைய உஜூது ஜவாஹிறுடைய உஜூதுக்கு ஐனாக இருக்கும். – ஆதேயங்களின் உஜூது ஆதாரங்களின் உஜூது தானானதாகவே இருக்கும்.

5. ஆதேயம் ஒவ்வொரு கணமும் அழிவிற்கும் நீங்கிக் போவதற்கும் இடமாகும்.

முதலாவது அடிப்படையாகிய உளதாக இருப்பது இல்லாததாக ஆகாது என்பதன்படி எந்தப் பொருள் அழிந்து போகிறதாகவும் இல்லாமலாகிப் போகிறதாகவுமிருக்கிறதோ அது வாஸ்தவத்தில் உளதானதாகவேயில்லை என்பது அவசியமாகிறது. ஏன் அது உளதானதாக இருந்தால் அது அழிந்து போகாது. எந்தப் பொருள் தனக்குச் சுயமான உள்ளமையில்லாமல் வேறு ஏதோ ஒரு சுயமான உள்ளமையுடைய ஒரு பொருளின் உள்ளமையினால் காட்சிக்குத் தோன்றுகிறதோ அதை நாம் மவ்ஜூது இ.்.திபாரி கவனிப்பினால் உளதானது என்று கொல்வோம். இன்னும் சந்தேகிக்கப்பட்டது, கற்பனையானது, நிழலைப் போன்றது என்றும் சொல்வோம்.

இன்னும் இந்த சுயமான உள்ளமை இல்லாததும் கவனிப்பினால் ஆனதுமான மவ்ஜூதை அந்த சுயமான உள்ளமையயுடைய மவ்ஜூதின் அதாவது தன் பொருட்டினால் இதற்குக் காட்சி தோற்றம் கிடைக்கிறதோ அதன் கற்பிதம் என்றும், நிழல் என்றும், சாய்கை என்றும் சொல்கிறோம். அந்த சுயமான மவ்ஜூதை இதற்கு மனஷா-உற்பத்தியிடம் என்று தரிபடுத்தி இதைக் கற்பனை, கனவு என்றும் சொல்கிறோம்.

உதாரணமாக பயந்த மனிதனுடைய முகத்திலுண்டாகும் மஞ்சள் நிறத்தையும் சந்தோஷமான மனிதனின் முகத்திலுள்ள சிகப்பு நிறத்தையும் போல இந்த மஞ்சள் நிறத்திற்கும் சிவப்பு நிறத்திற்கும் ஒரு சுயமான உள்ளமை இல்லை, என்றாலும் தசை, தோல், இரத்தத்தின் சுயமான உள்ளமையின் வேலைப்பாடுகளேயாகும். அதனுடைய ஒரு கோலமும் அதனுடைய ஒரு நிலையுமாகும். அதனாலேயே இல்லாமையாக இருந்த மஞ்சள் நிறமும் சிவப்பு நிறமும் உள்ளமையில் வந்திருக்கிறது. இல்லாமலிருந்து இருக்கிறதைப் போல் தோன்றுகிறது. எதார்த்தத்தில் இந்த மஞ்சள் நிறமும், சிவப்பு நிறமு் உள்ளமையின் வாடையைக் கூட நுகரவில்லை. ஏனென்றால் இந்த மஞ்சள், சிவப்பு நிறங்கள் நமது பார்வையில் உள்ளதாக காட்சியளிக்கிறது,

இல்லாததாகவும் ஆகிவிடுகிறது. எந்த வஸ்மு இல்லாமையையும், உள்ளமையையும் ஒப்புக் கொள்கிறதோ அது வாஸ்தவத்தில் சுயத்தில் இல்லாததுவேயாகும். அப்படியில்லை என்றால் இல்லாதது உள்ளமைக்கு வருவதும் இன்னும் அசம்பாவிதமாகிய ஹகீகத்து பிரள்வதும் சுயவடிவம் பிரள்வதும் அவசியமாகிவிடும். என்றாலும் இந்த மஞ்சள் நிறமும் சிவப்பு நிறமும் நமது பார்வையில் தரிபாடாக இருக்கிறது.

இன்னும் அதனுடைய ஹுக்முகளும் குணபாடுகளும் தரிபாடாக இருக்கிறது. இதனால் அதை நாம் மறுக்கிறவர்களுமில்லை, என்றாலும் அதை மவ்ஜூது இ..திபாரி தோற்றத்தில் உண்டானது. இரத்தத்துடைய மதிக்கத்தகாத கோலம் என்றும், அதனுடைய நிழல் சாய்கை என்றும் உற்பத்தி இடமான இரத்தத்தில் நின்றும் எடுக்கப்பட்டது, கற்பனை, கனவு என்று சொல்கிறோம். இந்த மஞ்சள் நிறமும் சிவப்பு நிறமும் ஒரு ஆதேயப் பொருளான கோலமாகும். இன்னும் ஆதேயங்கள் அழியக் கூடியதும், நீங்கிப் போவதுமாகும். எது அழிந்து போகக் கூடியதாக இருக்கிறதோ அது எதார்த்தத்தில் சுயமாக ம..தூம் ஆக இல்லாததுவாகவேயாகும். இந்த உலகமும் அதில் உள்ளவைகளும் அழிந்து போகிறதாகவும் நீங்கிப் போகிறதாகவும் இருக்கிறது. அது நமக்கு இரவு பகலாகக் காட்சியாகிக் கொண்டே இருக்கிறது. இதனாலேயே ஸூபியாக்கள் மேலே கூறப்பட்ட உள்ளது இல்லாததாகாது, இல்லாதது உள்ளதாக ஆகாது என்ற அடிப்படைக் கொள்கையினால் மட்டுமில்லை, மேலும் அவர்கள் அவர்களுடைய இருதயத்தையும், ஆன்மாவையும் சுத்தமாக்கியதனால் கண்காட்சியாகவும், அனுபோகமாகவும் இந்த உலகமும் அதிலுள்ளவைகளும் சுயமான உள்ளமையுடையதல்ல என்றும் உஜூது ஹக்கு மெய்ப்பொருளான ஹக்குதஆலாவின் உஜூதுதான் இந்த உலகாதி தோற்றங்கள் உண்டாகுமிடம். அதிலிருந்துதான் இவை உண்டான பொருளாகத் தோற்றமாகிறது என்றும் அறிந்து கொண்டு அலா குல்லு ஷையின் மாகலல்லாஹ பாதிலுன்- அல்லாஹ் அல்லாதவைகள் அடங்கலும் இல்லாதவைகளாகும் என்ற கவியை உண்மையாக்கிய நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருஹதீதையும் குல்லுஷையின் ஹாலிகுன் இல்லா வஜ்ஹஹு-சகல வஸ்துக்களும் (முக்காலமும்) அழிந்தது-இல்லாததுவாகும். (அல்லாஹ் தஆலா) அவனுடைய தாத்தைத் தவிர' என்ற இறைவசனத்தை நம்பி வழிப்பட்டு உலகமும் அதிலுள்ள உல்லா வஸ்துக்களும் அழிந்தது, சுயமாக இல்லாமலானது என்று நம்பினார்கள். அவைகளின் தோற்றத்திற்கும் காட்சிக்கும் உற்பத்தி ஸ்தானம் ஹக்கு தஆலாவின் உஜூது என்றார்கள். அவைகளைக் கற்பனை, கனவு என்று சொன்னார்கள். இது

குர்ஆன் ஷரீபுக்கும், ஸஹீஹான ஹதீதுக்கும் ஒற்றுமையானதுவாகும். ஸுபுஹானல்லாஹி அளீமி வபிஹம்திஹி!

ஷிர்குடைய எவ்வித கலப்புமில்லாத எதார்த்தமான தௌஹீதாகிறது, தாத்தில் உஜூதில் ஸிபத்தில்-செயலில் எந்த ஒரு வஸ்துவும் ஹக்குதஆலாவுக்குக் கூட்டானதாக இல்லை என்பதுவாகும். ஸூபிய்யாக்களான மஹான்கள் எந்த வஸ்துவையும் சுயமாக உண்டானது என்றே நம்பாமலிருக்கும்போது ஷிர்கு எங்ஙனம் உண்டாகும்? லாஇலாஹ இல்லல்லாஹ் இதுதான் தௌஹீது.

تف بر روئے آفتاب ہ بر روئے خود است

**துப்பர் றூயெ ஆப்தாப் பர் றூயெ குத் அஸ்த்**

‘(நடு நிசியில்) சூரியனைப் பார்த்து துப்புவது, தன் முகத்தில் துப்புவதாகும்’. எதார்த்தமான பொருள் எந்த மர்தபாவிலும் பேதகம், மாற்றம், திரும்புதல், உலைந்து போகுதலை விட்டும் நீங்கயிதும், பரிசுத்தமானதாகும். ஆனால் கற்பனை கவனிப்பினாலானதுதான் இந்த எல்லா வேலைகளுக்கும் இடமாகும். உதாரணமாகத் திராட்சை என்ற உருவம் கவனிப்பினாலானதாகும். பேதகத்தையும் மாற்றத்தையும் ஏற்று கொண்டு ரசத்தின் உருவத்தில் வந்தது. கள்ளின் உருவம் மாறி வினாகிரியின் உருவத்தில் வந்தது. ஆனால் உஜூது உள்ளமை இந்த நான்கு உருவுங்களிலும் ஊடுருவியிருந்து தனது பரிசுத்த நிலையிலேயே தரிபாடாக இருக்கிறது. மாறவில்லை, பேதகமாகவில்லை, இருந்தபடியேதான் இருக்கிறது. எல்லா இடத்திலும் அதனுடைய வெளிப்பாடே இருக்கிறது. எந்த உஜூது திராட்சை என்ற உருவத்திலிருந்ததோ அதுதானே எவ்வித பேதகமும், மாற்றமும் திரும்புதலும் உலைவுமில்லாமல் ரசத்திலிருக்கிறது. அதுவே கள்ளிலுமிருக்கிறது. அதுவே வினாகிரியிலுமிருக்கிறது. இந்த உருவங்கள் பேதகப்படுவதனாலும் உலைவை ஏற்பதனாலும் அதனுடைய பரிசுத்த தன்மையில் எவ்வித இடையூறும் உண்டாகவில்லை. ஏன் ‘உஜூது’ எதார்த்தமான பொருளும் தன்னாலேயே உண்டானதும் தன்னாலேயே நிற்கிறதுமாகும். ஆனால் உருவம் இடையில் வந்ததுவாகும். இதனாலேயே ஒவ்வொரு இடத்திலேயும் பிரண்டு கொண்டே போகிறது?. மேலும் ஒவ்வொரு கணத்திலும் அழிவுக்கும் நீங்கிப் போவதற்கும் இடமாகவுமிருக்கிறது. மேலும் எதார்த்தமாகப் பார்த்தால் அது மவ்ஜூதாகவுமில்லை ம.்.தூமாகவுமில்லை-உளதாகவுமில்லை. அது அழிவை ஏற்கவும் இல்லை. அதனுடைய உண்மையும், இன்மையும்,

நிலைபாடும், அழிவும், கற்பித கவனிப்பினாலான கருமங்களேயாகும். எதார்த்தமானதாக இல்லை.

பாருங்கள்! ஐஸூம், தண்ணீரும் இரண்டும் மற்றதுதானாகவேயாகும். எது தண்ணீரோ அதுவே ஐஸாகும். எது ஐஸோ அதுவே தண்ணீராகும். ஆனால் தண்ணீரின் ஓடுகிற உருவம் இப்போது மாறி ஐஸின் உறைகிற உருவம் உண்டாகி விட்டது. மேலும் இந்த ஐஸின் உருவத்துடைய ஹுக்முகளும் குணபாடுகளும் அதாவது இயற்கைச் சுபாவமும் குணமும் கூடத் தண்ணீரை விட்டும் அலாதியாகிவிட்டது. ஆனால் ஐஸின் உருவத்தினுடைய உஜூது-உள்ளமையாகிறது ஹகீகியாக எதார்த்தமானதாக இல்லை. என்றாலும் எந்த உள்ளமை தண்ணீருக்கு இருந்ததோ அதே உள்ளமைதான் இந்த ஐஸூக்குமாகும். ஐஸின் உருவம் சுயமான உள்ளமையின் வாடையையும் கூட நுகரவில்லை. வெறும் பார்வையிலும், கவனிப்பிலும், கனவிலும், கற்பனையிலுமே அதன் தோற்றமிருக்கிறது. பாருங்கள்! ஒரு சேர் (அல்லது ஒரு கிலோ) எடையுள்ள தண்ணீரை எடுத்துக் கொள்ளுங்கள். அதை ஐஸின் உருவத்தில் உறைய வையுங்கள். பின்னர் எடை போட்டுப் பார்த்தீர்களேயானால் கூடுதல் குறை இல்லாது ஒரு சேர்(அல்லது ஒரு கிலோ) ஐஸே இருக்கும். பின்னர் அந்த ஐஸை உருவ வைத்தால் தண்ணீரின் முந்திய உருவம் திரும்பவும் வந்து விடும். பின்னர் இந்த தண்ணீரை எடைபோட்டால் அதே எடைதானிருக்கும். அதாவது கூடுதல் குறைதல் இல்லாது ஒரு சேர் அல்லது ஒரு கிலோதானிருக்கும்.

இப்போது காட்டுங்கள்! ஐஸ் எங்கே போயிற்று? எப்படி இருந்தது? எப்போது வந்தது? எங்கிருந்து வந்தது? எப்போது இருந்தது? எப்போது அழிந்தது? இதேபோல் ஒரு தோலா தங்கத்தில் மோதிரம் செய்யுங்கள். பின்னர் எடை போட்டுப் பாருங்கள். ஒரு தோலா தங்கமே இருக்கும். உருக்கி விடுவீர்களேயானால் அந்த ஒரு தோலா தங்கமே இருக்கும். மோதிரம் வரவுமில்லை, போகவுமில்லை. ஐஸ் தண்ணீரின் ஒரு நிலையும், கோலமுமாகும். மோதிரம் தங்கத்தின் ஒரு நிலையும், கோலமுமாகும். ஐஸூம், எதார்த்த உள்ளமையின் வாடையை நுகரவில்லை. மோதிரமும் நுகரவில்லை.

كُلُّ شَيْءٍ هَالِكٌ إِلَّا وَجْهَهُ

**குல்லு ஷையின் ஹாலிகுன் இல்லா வஜ்ஹஹு**

'சகல வஸ்த்துக்களும் இல்லாமலானதுவாகும். அவனுடைய வஜ்ஹைத் தவிர!' அல்ஹம்துலில்லாஹி.

சூறத்து நௌயிய்யாவின் உஜூது இ.்.திபாரி- இன உருவத்தின் உள்ளமை கற்பிதமானது என்பதும், அது தன் தாத்தில் ம.்.தூமு ஹகீகி-எதார்த்தமாக இல்லாமையானது என்பது ருசுவாகி-நிரூபணமாகிவிட்டது. இப்போது மேலே போங்கள். நன்றாக சிந்தித்துப் பார்ப்பீர்களேயானால் எப்படி 'சூறத்து நௌயி'யானது 'சூறத்து ஜிஸ்மி'யின் பேரில் இன உருவுமானது சட உருவத்தின் பேரில் வந்த ஆதேயமாக இருக்கிறதோ அதேபோல 'சூறத்து ஜிஸ்மி'யாகிறது 'ஹயூலா'வின் பேரில் சட உருவமானது மூலப்பிரகிருதியின் பேரில் வந்த ஆதேயமாகும் என்பது விளங்கவரும். ஒன்றுக்கொன்று சரிசமமான வஸ்த்துக்கள் ஹுக்முகளிலும் குணபாடுகளிலும் சரிசமமாகவேயாகும். எப்போது சூறத்து நௌயிய்யா ம.்.தூமுன் பித்தாத்தியாக ஆகிவிட்டதோ-இன உருவம் எப்போது தன் தாத்தில் இல்லாமலானதாக ஆகிவிட்டதோ அப்போது சட உருவமும் மூலப்பிரகிருதிக்கு ஆதேயமாக இருப்பதனால் அதுவும் தன் தாத்தில் இல்லாமலானதாகவும், கற்பனைக் கவனிப்பினால் உள்ளமையானதாகவும் இருப்பது அவசியமாகிவிட்டது. இப்போது ஹயூலாவை-மூலப்பிரகிருதியை நோட்டமிட்டு கவனித்துப் பார்த்தீர்களேயானால் அது உஜூதின்- பரம்பொருளின் பேரில் வந்த ஆதேயமென்பதும் அதுவும் இன உருவம், சட உருவத்தைப் போன்று தன் தாத்தில் இல்லாமலானது, கற்பித கவனிப்பினால் உண்டானது என்பதும், அழிவு இல்லாது நீங்கிப் போவது வரும் இடமாகும் என்பதும் விளங்கவரும். ஆகவே இந்த எல்லா மர்தபாக்களிலும் பேதகமாகாமலும் மாறாமலும் பிரளாமலும் வலையாமலும் எதார்த்தமாக உண்டானதாக இருக்கக் கூடியது கலப்பற்ற உஜூது பரம்பொருள் மட்டுமேயாகும். இதுவே றப்புடைய வஜ்ஹாகும் என்றும் ருஜூவாகி நிருபணமாகிவிட்டது. அல்ஹம்துலில்லாஹில் கரீம்.

அல்லாஹு தஆலாவின் குல்லுஷையின் ஹாலிகுன் இல்லா வஜ்ஹஹு-சகல வஸ்த்துக்களும் அழிந்ததுவாகும், அவனுடைய வஜ்ஹைத் தவிர' என்ற சத்திய வாக்கியத்தின் உண்மை எதார்த்தமும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உண்மையாக்கி வைத்த 'அலா குல்லுஷையின் மாகலல்லாஹ காதிலுன்'-அல்லாஹ் அல்லாத சகல வஸ்துக்களும் அழிந்தவையாகும்' என்ற வாக்கியத்தின் உண்மையும் தரிபாடாகிவிட்டது. இன்னும் அதை நம்பி ஒப்புக் கொண்டவர்கள் பரிசுத்தப் பரம்பொருளான அல்லாஹ்வின் சமூகத்திலிருந்தும், சர்வ சிருஷ்டிகளுக்கும் காரண புருஷராகிய சர்வரே

ஆலம் றஸுூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களுடைய சமூகத்திலிருந்தும் உண்மையான ஈமான் எனும் காணிக்கையைப் பெற்றுக் கொண்டார்கள்.

گر نہ بیند بروز شپرہ چشم ۞ چشمۂ آفتاب را چہ گناہ

**'கா்னபீனத் பரோஸ் ஷப்பா்சஷம்**

**சஷ்ம யே ஆப்தாப் ராசே குனாஹ்'**

'பட்டப்பலில் சூரியனை வௌவாலின் கண் பார்க்கானால் சூரியனில் என்ன குறைபாடு?

சங்கையான ஸுூபிய்யாக்களிடத்தில் ஹக்குதஆலாவின் உஜுூது குல்லுமல்ல, ஜுூஸ்உமல்ல-முழுவதுமல்ல, துண்டுமல்ல. ஆம்முமல்ல, காஸுூமல்ல-பொதுவானதுமல்ல, குறிப்பானதுமல்ல. முகய்யதுமல்ல, முத்லகுமல்ல-கட்டுப்பாடனதுமல்ல, கட்டுப்பாடு இல்லாததுமல்ல. அவனுடைய பரிசுத்தம் அவனுடைய தாத்துக்காகவே உள்ளதாகும். தாத்துக்காக உள்ளவை தா்தை விட்டும் நீங்கிப் போகாது. அவனுடைய பரிசுத்தத் தன்மை அவனுடைய தாத்தை விட்டும் நீங்குவது அசம்பாவிதமானதாகும். சாத்தியமாகாததுவாகும். இதனாலேயே அவன் ஒவ்வொரு மா்தபாவிலும் உண்மையான தாதிய்யான கலப்பற்ற பரிசுத்தத் தன்மையிலேயே இருக்கிறான். அவன் உலகத்தின் ஒவ்வொரு மா்தபாவிலும் ஒவ்வொரு அணுவிலும் ஊடுருவியிருந்தும் எந்த வஸ்துவினுடைய சுத்தத்தினாலும் அவனுடைய பரிசுத்தத்தில் அபிவிருத்தி உண்டாகவுமாட்டாது. இன்னும் எந்தக் கெட்ட வஸ்துவினுடைய அசுத்தத்தினாலும் அவன் குணம் பெறவும் மாட்டான்.

மேலும் சகல உலகத்தினுடைய காட்சிகளும் அவைகளின் கற்பனையான உள்ளமைகளும் அவனுடைய அற்ப சொற்பமானதோா் தோற்றமேயாகும். இப்படியிருந்தும் அவன் சகலத்துடனேயும் வேறாகவும், ஒட்டியும் ஒட்டாமலுமிருக்கிறான்.

பாருங்கள்! ஒளியாகிறது நெருப்பு, காற்று, தண்ணீா், மண் ஆகியவைகளை விடவும் மிருதுவானதாகும்.என்றாலும் உஜுூதுவின் மிருதுவைக் கவனித்தால் அது மூன்று தறஜாவில் திண்மையானதாக இருக்கும். ஒளி மின்னலை விடவும் திண்மையானது. றூஹுூ கலப்பற்ற உஜுூதை விடவும் திண்மையானதாகும். என்றாலும் ஒளி இப்படித் திண்மையானதாக இருப்பதோடு அது அசுத்தமான

வஸ்த்துக்களிலெல்லாம் ஊடுருவியிருக்கிறது. ஆனால் அசுத்தமான வஸ்துவின் அசுத்தத்தினால் அது குணம் பெற்றதாக ஆகிறதில்லை.

மேலும் இதுவும் உங்களுக்கு நன்றாகத் தெரியும். அதாவது வஸ்துக்கள் சுத்தமானதாக இருந்தாலும் சரி அல்லது அசுத்தமானதாக ஆனாலும் சரி அது காட்சியாவதும் தென்படுவதுமாகிறது சூரிய ஒளி ஊடுருவுவதன் பொருட்டினாலேயாகும். எதுவரையிலும் சூரிய ஒளியின் கதிர், வஸ்துக்களின் பேரில் விழவில்லையோ அதுவரையிலும் வஸ்துக்கள் நம்முடைய பார்வையை விட்டும் மறைந்து தூரமாகி இல்லாத பொருளைப் போன்று ஆகிவிடும். எப்படி வஸ்துக்கள் சூரிய ஒளியின் பொருட்டினால் அல்லாமல் இருட்டின் திரைகளை விட்டும் வெளியில் வர முடியாதோ அதே போல் உஜூது ஊடுருவுவது இல்லாமல் ஒரு வஸ்துவும் வெளியில் வர முடியாது.

اَللّٰهُ نُوْرُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ

**‘அல்லாஹு நூறுஸ்ஸமாவாதி வல் அர்ளி’**

‘அல்லாஹ் வானங்கள், பூமியின் ஒளியாக இருக்கும் என்ற ஆயத்திற்கு இதுவே கருத்தாகும்.

‘உஜூது’ ஆகிறது மிருதுவானவைகளிலெல்லாம் மிகவும் மிருதுவானதாகும். எப்போழுது ஒளியானது, அது திண்மையானதாக இருந்தும் அசுத்தமான வஸ்துக்களின் சகவாசத்தில் அதனோடு இருந்தும்கூட அது குணம் பெற்றதாக ஆகவில்லையோ, சகல மிருதுவானவைகளுக்கும் மிருதுவான ‘உஜூது’ அது அசுத்தமான வஸ்துக்களின் சகவாசத்தில் எங்ஙனம் குணம் பெற்றதாக ஆகும்?

سُبْحَانَ اللّٰهِ تَعَالٰى عَمَّا يَصِفُوْنَ

**‘ஸுப்ஹானல்லாஹி தஆலா அம்மா யஸிபூன்’**

‘அவர்கள் வர்ணிப்பதை விட்டும் அல்லாஹு தஆலா பரிசுத்தமானவன்’.

ஒளியைப் பற்றியும், ஒளியின் பொருட்டினால் வஸ்துக்கள் வெளியாவதைப் பற்றியும் பேச்சு வந்ததனால் காட்சியின் எதார்த்தத்தைப்

பற்றியும் இங்கு சுருக்கமாக விளக்கி வைப்பது உசிதமானதெனக் கருதுகிறேன்.

பாருங்கள்! வஸ்துக்களைப் பார்ப்பதற்கு மூன்று ஷர்த்துக்கள்-நிபந்தனைகள் உள்ளன. 1.) முன்னாலிருப்பதும் 2.) தூரத்திலிருப்பதும் 3). ஒளியுமாகும்.

விளக்கின் ஒளியினாலும் சரி அல்லது சூரியனின் ஒளியினாலும் சரி எப்பொழுது வஸ்துக்களில் விழுமோ அப்போது அந்த வஸ்து அல்லது வஸ்துக்கள் பார்க்கப்பட்டதாக ஆகும். பின்னர் ஜெயிது, அம்று இவர்கள் எல்லாம் 'நான் அறையினுள் ஒரு அலமாரியில் கிதாபுகள் இருக்கப் பார்த்தேன்' என்று சொல்கிறார்கள். அதைப் பற்றி யாருக்கும் ஆட்சேபணை இல்லை. அப்படிச் சொல்லக் கேட்டவர் ஒவ்வொருவரும் 'சந்தேகமில்லாமல் அவர் பார்த்திருக்கலாம்' என்றே சொல்வர்கள். ஏன் பார்க்கிறது சாத்தியமானவைகளிலுள்ளது தானே! ஆனால் கிதாபைப் பார்த்ததும், அலமாரியைப் பார்த்ததும் அந்தப் பார்வையின் கண்ணொளியின் வெளியாக்குதலுக்குள் அடங்கியிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். இதே போல் விளக்கு அல்லது சூரியனுடைய ஒளியும் இந்தப் பார்வையினுள் அமைந்திருக்கிறது. மேலும் வஸ்துக்களைப் பார்ப்பதற்கு முன்னால் க்ணொளியானது முதல் பார்வையில் ஒளியைப் பார்த்தது. ஒளி இல்லையானால் அந்த வஸ்துவைப் பார்க்க முடியாது.என்றாலும் வழக்கத்தில் அதைப் பார்ப்பதைப் பற்றிய கவனம் ஒவ்வொரு மனதையும் விட்டும் சிந்தனையையும் விட்டும் எடுபட்டதாகவே இருக்கிறது. நீங்கள் எப்பொழுது பார்ப்பதைப் பற்றிச் சொல்லிக் காட்டுவீர்களோ அப்போது நான் பூமியைப் பார்த்தேன், வானத்தைப் பார்த்தேன், சந்திரனைப் பார்த்தேன், சமுத்திரத்தைப் பார்த்தேன், ஜெயிது அம்றை பார்த்தேன், குதிரையைப் பார்த்தேன், யானையைப் பார்த்தேன், தாயைப் பார்த்தேன், தகப்பனைப் பார்த்தேன் இப்படியே சொல்வீர்கள். ஆனால் எதார்த்தத்தில் ஒளியைப் பார்ப்பது வஸ்துக்களைப் பார்ப்பதற்கு முந்தினதாக இருந்தும் கூட இந்த வஸ்துக்களைப் பார்ப்பதற்கு முன்னால் நான் சூரியனுடைய ஒளியை அல்லது தீபத்தின் ஒளியைப் பார்த்தேன் என்று ஒரு போதும் சொல்லமாட்டீர்கள். மேலும் அதைப் பார்ப்பதற்கு உங்கள் சிந்தனையிலும் கூட இடம் கொடுக்கமாட்டீர்கள்.

ஜனாப் லிபரல் சாகிபு! ஹக்கு தஆலா வஸ்துக்களை வெளியாக்கி வைக்காமலா அவைகள் வெளியாகின்றது? அவைகளை வெளியாக்கியவன் ஹக்கு தஆலா இல்லையா? சூரியனுடைய ஒளியும் கூட அது வெளியாவதற்கும் உண்டாவதற்கும் ஹக்கு தஆலாவின் ஒளி

உஜூது அளவில் தேவையானதாகவே இருக்கிறது. எப்படி வெளியில் வஸ்துக்களைப் பார்ப்பது சூரியனின் ஒளியைக் கொண்டு கட்டுண்டதாக இருக்கிறதோ அதேபோல் ஒவ்வொரு வஸ்துவும் காட்சியாவது ஹக்கு தஆலாவின் காட்சியாவதோடு கட்டுண்டதாகவே இருக்கிறது. முதல் பார்வையில் கண்ணொளியானது ஹக்கு தஆலாவினுடைய உஜூதைப் பார்ப்பது கொண்டே பாக்கியம் பெறுகிறது. இரண்டாவது பார்வையில் தான் வஸ்துக்களைப் பார்ப்பதை உண்டாக்கிக் கொள்கிறது.

مَارَأَيْتُ شَيْئًا اِلَّا وَرَأَيْتُ اللهَ قَبْلَهُ

**'மாறஐது ஷைஅன் இல்லா வறஐதுல்லாஹ கப்லஹு'**

'நான் ஒரு வஸ்துவையும் பார்க்கிறதில்லை, அதற்கு முன்னால் அல்லாஹ்வைப் பார்த்தே ஒழிய' என அபூபக்கர் ஸித்தீகு ரலியல்லாஹு அன்ஹு சொன்னது போல் எவன் இதை இல்முல் யகீனாக அறிந்துக் கொண்டானோ அவனே இந்த துன்யாவில் ஹக்குத்தஆலாவின் காட்சியைக் கொண்டுப் பாக்கியம் பெற்றான். மேலும் நாளை கியாமத்து நாளையிலும் இந்த சிறப்பான காட்சிப் பரிவட்டம் அவன் தலையிலேயாகும். அப்படி இல்லையானால் நாளை கியாமத்து நாளில் இந்தப் பாக்கியத்தை விட்டும் பேறு கெட்டவனாக ஆவான்.

مَنْ كَانَ فِىْ هٰذِهٖۤ اَعْمٰى فَهُوَ فِى الْاٰخِرَةِ اَعْمٰى
وَاَضَلُّ سَبِيْلًا

**'மன்கான பீ ஹாதிஹி அ.்.மா பஹுவ பில்ஆகிறதி அ.்.மா வஅளல்லு ஸபீலா'**

'எவன் இந்த உலகத்தில் குருடனாக இருந்தானோ அவன் ஆகிறத்திலும் குருடனாகும். மேலும் பாதையால் மிகவும் வழிகெட்டவனுமாகும்' என்பதன் கருத்து இதுவேயாகும். துன்யாவில் அல்லாஹ்வைக் கண்டதாக தாவா செய்தவன் உங்களின் கொள்கைப் பிரகாரம் (அல்லாஹ் காப்பாற்ற வேண்டும்) இஸ்லாத்தின் வட்டத்தை விட்டும் அப்பாற்பட்டவனாக இருந்தால் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு 'நான் ஒரு வஸ்துவையும் பார்ப்பதில்லை, அதற்கு முன்னால் அல்லாஹு

தஆலாவைப் பார்த்தேயல்லாது' என்று சொல்லி இருக்க மாட்டார்கள். இன்னும் ஹளறது அலி கர்ரமல்லாஹு தஆலா வஜ்ஹஹு அவர்கள்:

لَمْ أَعْبُدْ رَبًّا لَمْ أَرَهُ

**'லம் அ.்.புது றப்பன் லம் அறஹு'**

நான் (கண்ணால்) காணாத நாயகனை வணங்க மாட்டேன். (எனினும் அல்லாஹ்வை நான் பார்த்து வணங்கினேன்) என்று முழங்கியிருக்கவும் மாட்டார்கள். எந்த ஒரு வஸ்துவையும் எட்டிக் கொள்வது கண் பார்வைக்குள்ளதல்ல. கண்டிப்பாக அது புத்திக்குள்ளதுவாகும். 'லாதுத்ரிகுஹுல் அப்ஸாறு-அவனைப் பார்வைகள் எட்டிக் கொள்ளாது' என்பதின் 'இத்றாக்' 'எட்டிக் கொள்வது' என்ற பதம் இஹாதத்து சூழ்ந்து கொள்வது என்ற கருத்துக்கு புழங்கப்பட்டிருக்கிறது. நீங்கள் சூரியனையோ, வானத்தையோ பார்த்ததில் உங்களுக்கு ஏதும் சந்தேகமிருக்கிறதா? அறவே இல்லை. மேலும் நீங்கள் ஒவ்வொரு நாளும் நான் வானத்தைப் பார்த்தேன், பூமியைப் பார்த்தேன், சூரியனைப் பார்த்தேன், சந்திரனைப் பார்த்தேன் என்று சொல்கிறீர்கள். ஆனால் இன்று வரையிலும் உங்களுக்கு அந்த வஸ்துக்களை எட்டிக் கொள்வது உண்டாகவில்லை. இனியும் உண்டாகாது. பார்ப்பது என்பது வேறு.

சங்கையான ஆயத்து எட்டிக் கொள்வது இல்லை என்றுதான் அறிவிக்கிறது. பார்ப்பதைப் பற்றியல்ல! இதனாலேயேதான் 'அலம் தற இலாறப்பிக கைப மத்தளில்ல'-உம்முடைய போஷகனளவில் பார்க்கவில்லையா? அவன் எப்படி நிழலை நீட்டியிருக்கிறான்' என்ற ஆயத்தின் பேரில் உங்களுடைய கவனம் செல்லவில்லை.

நீங்கள் கண்ணால் பார்க்கிற பாடத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குங்கூட இடம் கொடுக்கமாட்டீர்கள் போல்! எதார்த்தமான ஒளியாகிறது ஹக்கு தஆலாவின் உஜூதேயாகும். ஒளி என்பதற்கு எதார்த்தமான பொருள் 'ளாஹிறுன் லிதாத்திஹி முள்ஹிறுன் லிஹைறிஹி'-'தன்னாலே வெளியாகி தானல்லாததையும் வெளிக்காட்டக் கூடியதுவாகும் என்பதாம். தன்னாலேயே வெளியானது 'உஜூது' அல்லாது வேறொன்றுமில்லை என்று உங்களுக்கும் தெரியும். எத்தனை வஸ்துக்கள் இருக்கின்றனவோ அவையெல்லாம் இன்னொருவனால் வெளியானதாம். ஏன் அவைகள் வெளியாவது ஹக்கு தஆலாவின் உஜூதைக் கொண்டேயாகும். அவைகளின் தாத்தினாலல்ல.

ஹக்கு தஆலாவின் உஜூதே தன்னாலேயே வெளியானதாகும். ஏன் அவன் தனக்குத் தானே உண்டானவனாகும். இதுவே மெய்யான உஜூதின் மர்தபாவாகும். இந்த மெய்யான உஜூதேதான் மற்ற வஸ்துக்களை எல்லாம் வெளியாக்கி இருக்கிறது. வஸ்து என்பதைவிட்டும் உஜூது என்பதை நீக்கி விடுவீர்களேயானால் அது ம.்.தூம்-இல்லாததுவாகவே ஆகிவிடும். வஸ்துகள் வெளியாவதற்கு அதனுடன் உஜூது உடந்தையாக இருப்பது அவசியமாக இருப்பதைப் போல் வஸ்துக்கள் நிலைபாடாக இருப்பதற்கும் உஜூது அத்துடன் உடந்தையாக இருப்பதும் அவசியமாகும். இந்த விதமாக அவன் உலகாதி வஸ்துக்களோடு உடந்தையாக இருக்கவில்லையானால் உலகம் அழிந்து போய்விடும். மண்ணால் செய்யப்பட்ட கூஜாவாகிறது அதைச் செய்து முடித்தபின் அது தரிபாடாக இருப்பதற்கு குயவனளவில் தேவையானதாக இல்லாதிருப்பதைப் போல் உங்களுடைய கொள்கையில் உலகமும் அதை படைத்த நாயனளவில் அது தேவையானதாக இல்லையோ? ஹக்கு தஆலா சகல வஸ்துவுடனுமிருக்கிறான் என்ற மஸ்அலாவில் தப்பான ஆராய்ச்சிகளையும் கொள்கைகளையும் பின்பற்றிச் சங்கையான ஆயத்துகளான

وَهُوَ مَعَكُمْ أَيْنَمَا كُنْتُمْ وَنَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيدِ وَلِلَّهِ الْمَشْرِقُ
وَالْمَغْرِبُ فَأَيْنَمَا تُوَلُّوا فَثَمَّ وَجْهُ اللَّهِ اللَّهُ نُورُ السَّمٰوٰتِ وَالْأَرْضِ

'நீங்கள் எங்கிருந்தாலும் அவன் உங்களோடிருக்கிறான். நாம் அவனளவில் பிராண நரம்பை விடவும் சமீபமாக இருக்கிறோம்' 'நீங்கள் எங்கு முகம் நோக்கினும் அங்கு அல்லாஹ்வின் வஜ்ஹு இருக்கிறது'. அல்லாஹ் வானங்களின் பூமியின் ஒளியாகும்'. இவைகளை எல்லாம் புறக்கணித்து விடுவீர்களோ? பரிசுத்த குர்ஆனில் அருளப்பட்ட சுத்தமான வாசகத்தின் பேரில் ஒரு மயிரிழையாவது கூட்டுவதும், குறைப்பதும் குற்றாக இருக்கும். கண்ணால் பார்க்கும் காட்சி றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு உண்டாகியிருந்தால், நீங்களும் அப்படியே அதை ஒப்புக் கொள்வீர்களேயானால் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களில் பனாவாகும் பாக்கியத்தைப் பெற்ற அந்தப் பரிசுத்த மஹான்களுக்கு அது கண்காட்சியாக உண்டாவது அவசியமேயாகும். மேலும் உங்களிடத்தில் பனாபில்லாஹ் அல்லாஹ்வில் பானாவாகிள தறஜா தரிபட்டதாக இருக்குமேயானால் அந்த மாதிரியான அடியார்களைக் காண்பதும் காட்டுதும் அல்லாஹ்வைக் காண்பதும் காட்டுவதுமேயாகும்.

‘குற்புன்னவாபிலு’ ‘ஸுன்னத்தான அமல்களைக் கொண்டு அடியான் அல்லாஹ் அளவில் முடுகுதலாவது’ என்பதற்கு என்ன கருத்து?

لَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إِلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ فَإِذَا أَحْبَبْتُهُ كُنْتُ سَمْعَهُ الَّذِي يَسْمَعُ بِهِ
وَبَصَرَهُ الَّذِي يُبْصِرُ بِهِ وَيَدَهُ الَّتِي يَبْطِشُ بِهَا وَرِجْلَهُ الَّتِي يَمْشِي بِهَا

‘............ நான் அவன் கெட்கக் கூடி கேள்வியாக ஆகிவிடுவேன். அவன் பார்க்கிற பார்வையாக ஆகிவிடுவேன். அவன் பேசுகிற நாவாக ஆகிவிடுவேன். அவன் பிடிக்கிற கையாக ஆகிவிடுவேன். அவன் நடக்கிற காலாக ஆகி விடுவேன்’ என்ற வார்த்தைகள் மறுதளிக்கத் தக்கவைகளா? இது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களுடைய ஹதீது இல்லையா? இந்த ஹதீது குத்ஸியை இமாம் புகாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தங்களுடைய ஸஹீஹு கிரந்தத்தில் ரிவாயத்து செய்யவில்லையா? இந்த ஹதீதை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே அல்லாஹு தஆலா அளவில் (அவன் சொல்கிறதாகச் சொல்லி) சேர்க்கவில்லையா? எப்பொழுது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அல்லாஹு ஜல்ல ஷானஹு தஆலாவும் அப்படியான பரிசுத்த அடியார்களுடைய கேள்வி, பார்வை, நாவு, கை, கால் அன்னுமொரு ரிவாயத்துபடி இருதயம், புத்தி இவைகளை ஹக்குதஆலா தானாகும் என்று சொல்லிக் காட்டிவிட்டார்களோ, நீங்களே சொல்லுங்கள் இந்த அடியார்கள் எப்படி ஆகிவிட்டார்கள்? இந்த உறுப்புகளுக்கும் அவயங்களுக்கும் தானே அடியானென்று பெயர்? எப்பொழுது இவைகள் எல்லாமே ஹக்கு தஆலா தானாக ஆகிவிட்டதானால் பின்னர் அடியான் எங்கே இருக்கிறான்? பின்னர் அவனைப் பார்ப்பது ஹக்கைப் பார்பபதுவல்லாமல் வேறென்ன?

اَلنَّظَرُ إِلَى وَجْهِ عَلِيٍّ عِبَادَةٌ

**‘அன்னள்று இலா வஜ்ஹி அலிய்யின் இபாததுன்’**

‘அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் முகத்தைப் பார்ப்பது வணக்கமாகும்’ என்பதற்கு இதுவே கருத்தில்லையானால் வேறென்ன?

وَلِلّٰهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ فَاَيْنَمَا تُوَلُّوْا فَثَمَّ وَجْهُ اللّٰهِ

**'............பஜனமா துவல்லூ பதம்ம வஜ்ஹுல்லாஹி'**

'நீங்கள் எங்கு முன்னோக்கினாலும் அங்கு அல்லாஹ்விகன் வஜ்ஹு இருக்கிறது'. நாம் மேலே சொல்லியிருக்கிறோம், றப்புடைய வஜ்ஹு என்பது உஜூது ஹகீகி-எதார்த்த மெய்ப் பொருளாகும். அது தன்னாலேயே வெளியானதும், அதல்லாததை வெளியாக்கக் கூடியதுமாகும். அது சகல வஸ்துக்களையும் சூழ்ந்து கொண்டிருக்கிறது.

اَلَاۤ اِنَّهٗ بِكُلِّ شَیْءٍ مُّحِیْطٌ

**'அலா இன்னஹு பிகுல்லி ஷையின் முஹீத்'**

'நிச்சயமாக அவன் சகல வஸ்துக்களையும் சூழ்ந்து கொண்டிருக்கிறான்'. அதைப் பார்ப்பதும், காணுவதும் ஒவ்வொரு வஸ்துவையும் பார்ப்பதற்கும் காணுவதற்கும் முந்தினதாகும். எப்படி கண்ணாடியில் பதிந்த சூறத்துகள் பார்க்கிறவனுடைய பார்வைக்குத் தென்பட்டதாகவும் கண்ணாடி மறைந்ததாகவுமிருக்கிறது? என்றாலும் எதார்த்தத்தில் முதலாவது பார்வையில் கண்ணாடிதான் வந்தது. இரண்டாவது பார்வையில்தான் சூறத்துக்கள் வந்தது. ஆனால் பார்க்கிறவன் அதைப் பற்றி கவனமில்லாதிருக்கிறான்.

அவன் கண்ணாடியில் பதிந்த சூறத்தைப் பார்ப்பதிலேயே ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான். இதே விதமாகவே ஒவ்வொரு வஸ்துவைப் பார்ப்பதும் ஹக்கு த ஆலாவின் உஜூதைப் பார்த்ததின் பின்னாலேயே உண்டாகிறது. 'ஜனமா துவல்லூ பதம்ம வஜ்ஹுஜல்ராஹி' 'நீங்கள் எங்கு முகம் திருப்பினாலும் அங்கு அல்லாஹ்வின் வஜ்ஹு இருக்கிறது' என்பதற்கு இதுவே கருத்தாகும். 'வஹுவமஅகும் ஜனமாகுந்தும்'-'நீங்கள் எங்கே இருந்தாலும் அவன் உங்களுடனேயே இருக்கிறான்' என்பதற்கு இதுவே கருத்தாகும். அவன் சகல வஸ்துகளுடனும் ஒன்றாக இருப்பது எப்படி என்றால் தண்ணீர் ஐஸுடன் இருப்பது போலும், தங்கம் மோதிரம், காப்பு மற்றும் தங்க நகைகளுடனிருப்பது போலுமாகும். எப்படிக் கண்ணாடியாவது அதில் படிகிற சூறத்துகளின் பரிசுத்தத்தினாலோ அல்லது அதன் அசுத்தத்தினாலோ குணபாடு பெறாதோ அதேபோல் ஹக்குத்தஆலாவின் உஜூதும் இந்த வஸ்துகளுடன் சேர்வதால்

அவைகளுடைய குணபாடு ஹுக்முகளைக் கொண்டு குணபாடு பெறாமல் நீங்கிப் பரிசுத்தமானதாக இருக்கும்.

தஸவ்வுபுடையவர்கள் ஸூபிய்யாக்கள் தூய்மையான குர்ஆனையும், பரிசுத்த ஹதீதுகளையும் பின்பற்றி நடப்பவர்களாகும். அவர்களுடைய ஒரு மூச்சும் கூட அவற்றைப் பின்பற்றாது செல்லுபடியாவதில்லை. உண்மையில் அவர்கள் இஸ்லாத்தின் தூண்களாகவும், மார்க்கத்தின் உயிர் நாடியுமாவார்கள். அவர்கள் அக்காலத்தது மக்களுக்கு வரக்கூடிய ஆபத்துகள், துன்பங்களைவ விட்டும் அவர்களைக் காப்பாற்றக் கூடிய கேடயமாகும். அரணான கோட்டையாகும். அவர்களைப் பின் தொடர்ந்து நடப்பது குர்ஆனையும், ஹதீதையும் பின் தொடர்ந்து நடப்பதாகும். அவர்களுடைய தசைகள் உடனே சாகக் கூடிய நஞ்சாக இருக்கும். அவர்களைப் பற்றி புறம் பேசுவது மார்க்கத்தையும், ஈமானையும் நாசமாக்கக் கூடியதாகும். 'மன் ஆதாலீ வலிய்யன் பகத் ஆதந்துஹு லில் ஹர்பி'- எவன் என்னுடைய ஒலிக்குத் தொந்தரவு கொடுத்து என்னை வருத்தப்படுத்துவானோ அவனுக்கு (என்னோடு) சண்டை செய்ய உத்தரவு கொடுத்து விட்டேன்'.

هُمْ قَوْمٌ لَا يَشْقَى جَلِيسُهُمْ وَلَا يَخِيبُ أَنِيسُهُمْ

**'ஹும் கௌமுன் லா எஷ்கா ஜலீஸுஹும் வலா யகீபு அனீஸுஹும்'**

'அவர்கள் அவர்களோடு ஒன்றாக இருப்பவன் மூதேவியயாகாதவர்கள். அவர்களோடு மருகுதலாக இருப்பவன் பேறு கெடாதவர்கள்'

لَوْ أَقْسَمُوا عَلَى اللّٰهِ لَأَبَرَّهُ

**'லவ் அக்ஸமு அலல்லாஹி லஅபர்ரஹு'**

'அவர்கள் அல்லாஹ்வின் பேரில் சத்தியம் செய்(து சொல்)வார்களேயானால் அவன் அவர்களுடைய சத்தியத்தை நிறைவேற்றுவான்'

هُمْ قَوْمٌ إِذَا رُؤُوا ذُكِرَ اللّٰهُ

**‘ஹூம் கௌமுன் இதாறுஊ துகிரல்லாஹு‘**

‘அவர்கள் அவர்களைப் பார்க்கப்பட்டால் அல்லாஹ்வை நினைக்கப்படக்கூடியவர்கள்’ எவர்களுக்கு இத்தகைய மதிப்பும், மரியாதையும் இருக்கிறதோ, எவர்களுக்கு அல்லாஹுத் தஆலாவினுடையவும், அவனுடைய தூதர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய பரிசுத்தத் திருவாக்கினால் இந்த சிறப்பும், சங்கையும் அருளப்பட்டதோ அவர்களுடைய வார்த்தைகளையும், செயல்களையும் கனவு. கற்பனை என்றும், அவர்களுடைய நூல்களை போதையில் எழுதப்பட்டது என்றும் அறிவது ஜனாப் லிபறல் சாகிபுடைய சாதாரண துணிச்சலல்ல! ஆண்டவா! எங்களைக் கெட்ட எண்ணங்களை விட்டும் காப்பாற்றுவாயாக! உன்னுடைய நபி, உன்னுடைய அன்பர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களுடைய பொருட்டினால் எங்களை உன்னுடைய சங்கையான ஒளலியாக்களின் தொண்டர்களில் நின்றுமாக்குவாயாக!

நாம் று.்.யது, மஇய்யது, அக்றபிய்யது-கண்ணால் பார்ப்பது, உடந்தையாக இருப்பது, முடுகுதலாக இருப்பது இவைகளின் மஸ்அலாவைப் பற்றி இதை விடவும் மிகவும் விரிவாகவும், விளக்கமாகவும் விவரித்துக் காட்டியிருப்போம். ஆனால் என்ன செய்யலாம்! இங்கு அதற்கு இடம்பாடில்லை. மனதின் நாட்டம் மனதிலேயே இருந்துவிட்டது. வேறொரு நூல் கோர்வை செய்து கொண்டிருக்கிறோம். அல்லாஹ் நாடினால் பின் அதை உங்களுடைய சமூகத்தில் கொண்டு வருகிறோம்.

ஏவல், விலக்கல், தண்டனை, சன்மானம் ஆகிய இந்த மஸ்அலாக்களைப் பற்றி நீங்கள் விசேஷமாக கவனிக்க வேண்டும். அல்லாஹ் உங்களையும் நீங்கள் செய்வதையும் படைத்தான் என்பது அல்லாஹ்வின் திருவாக்கியம். கல்கை-படைப்பை அல்லாஹ்வின் பக்கமும், கஸ்பை-தொழிலை அடியார்களின் பக்கமு் சேர்க்கப்படுகிறதே இதற்கு ஏதாவது கருத்து இருக்கிறதா? அல்லது தப்பித்துக் கொள்வதற்கு வெளும் பாதுகாப்பா? அல்லாஹுத்தஆலா அடியானின் எல்லாத் தொழில்களையும் தன்னுடைய படைப்பு என்று காட்டுகிறான். இந்தப் பெரியார்கள் (முதகல்லிமீன்கள்) அடியானுடைய கஸ்பை-தொழிலை அல்லாஹ்வின் செயலை விட்டும் அப்புறப்படுத்துகிறார்கள். கஸ்பு என்பது செயலில்லையா? சொல்லுங்கள். கஸ்புடைய கொழுகுதல் உறுப்புக்களுடனே உள்ளதா? அல்லது இருதயத்தோடு உள்ளதா? உறுப்புக்களுடனே கொழுகியதாக இருந்தால் இதற்குக் கருத்தாகிறது,

உவமையில் ஜெய்து என்பவன் அம்று என்பவனுடைய கன்னத்தில் ஒரு அடி அடித்தானேயானால் அவனுடைய கையின் அசைவும், அடியும் அம்று என்பவனுடைய கன்னத்தில் குணபாட்டை உண்டாக்கியதும் இவைகளெல்லாம் ஜெய்து என்பவனுடைய கஸ்பும், அவனுடைய செயலைக் கொண்டே சொந்தமானதும் என்பதாகும். இந்தக் கருமங்களெல்லாம் ஜெய்துடைய கஸ்புகளாகவும் செயல்களாகவும் அல்லாஹ்வின் செயலை விட்டும் புறம்பானதாக ஆகிவிட்டதனால் இனி அல்லாஹ்வின் செயல்களில் சேருவதற்கான கருமம் இங்கு என்ன எஞ்சி இருக்கிறது? அதனால் அல்லாஹ் உங்களையும், நீங்கள் செய்கிறதையும் படைத்தான் என்ற திருவாக்கியம் உண்மையாக வேண்டும்.

இன்னும் கஸ்புடைய கொழுக்கு இருதயத்துடனானதாக இருந்தால் அதற்கு மனதின் அசைவு, எண்ணம் நாட்டம் என்று சொல்லப்படும்.

அப்போது, நீங்கள் நாடுகிறதில்லை அல்லாஹ் நாடியேயல்லாமல் என்ற திருவாக்கியத்திற்கு என்ன மறுமொழி சொல்லப்படும்? மேலும் இந்தக் கேள்விகளுக்கும் என்ன மறு மொழி? அதாவது ஜெய்து என்பவன் அம்று என்பனைக் கொலை செய்ய நாடினார். பக்று என்பவன் ஜெய்துடைய இந்த நாட்டத்தை அறிந்து கொண்டு தன்னுடைய சக்தியைக் கொண்ட தன் கையினால் வாளைக் கொண்டு அம்று என்பனைக் கொலை செய்து விட்டானேயானால் உங்களிடத்தி பழி வாங்கப்படுவதற்கு உரித்தானவன் ஜெய்து என்பவன்தானா? பக்று என்பவன் அதற்குப் பொறுப்பில்லாதவனா? அப்படித்தானென்றால் அதற்கு ஆதாரமாகக் குர்ஆன் ஆயத்துக்களிலிருந்து எடுக்கப்பட்ட மார்க்கத் தீர்ப்புகளிலிருந்து ஒரு உதாரணம் காட்டுங்கள். அப்படி இல்லையென்றால் நீங்கள் ஜெய்து என்பவன் பழி வாங்கப்படுவதற்கு அவசியமானவன் என வைத்து அவனை வெட்டுவீர்களானால் இப்படி வெட்டுவது அநியாயம் இல்லை? நான் உரத்த தொனியோடு சொல்வேன், இது சந்தேகமில்லாமல் அநியாயமாகும்.

வெறும் நாட்டம் மட்டும் செய்த வேலைக்குத் தீர்ப்பு அளிக்கவும், குணபாடு செய்யவும் மார்க்கத்தில் போதுமானதாகாது. எனினும் தீர்ப்பு வழங்கவும், குணபாடு செய்யவும் நாட்டமும், செயலும் எப்பொழுது உண்டாகி விடுமோ அப்போது அந்தச் செயலுக்குத் தீர்ப்பும், குணபாடும் அந்தச் செயல் நல்லதாக இருந்தால் சன்மானத்தின் ரூபத்திலும், கெட்டதாக இருந்தால் தண்டனையின் ரூபத்திலும் உண்டாகி விடும்.

இப்போது என்ன சொல்வீர்கள்? அதாவது ஜெய்துடைய கஸ்புவாகிறது வெறும் எண்ணமே அல்லது நாட்டமேதான்! அல்லாஹ்தான் செயலை அதாவது அம்றை வெட்டுவதை வெளியில் கொண்டு வந்தான். இன்னுமொரு விதமாகச் சொன்னால் அல்லாஹ்தான் வெட்டினான். ஆனால் குற்றவாளியும் பழிவாங்கப்படக் கடமையானவனும் ஜெயிதுதான், அல்லாஹு தஆலா பொறுப்பாளி இல்லை. அவன் பரிசுத்தமானவன் என்றால் பின்னர் நிச்சயமாக அல்லாஹ் அடியார்களுக்கு அநீதி செய்பவனில்லை என்ற வாக்கியத்திற்கு என்ன பொருள். வெறும் மனதைச் சந்தோசப்படுத்துவதும் சாந்தி செய்வதும்தானா? அல்லது அதற்கு எதார்த்தத்தில் கருத்து ஏதும் உண்டா? மேலும் ஜெயிதுடைய மனநாட்டம் தீர்ப்பு செய்யக் கூடியதாகவும், அல்லாஹு தஆலா ஜெயிதின் மன நாட்டத்தினால் தீர்ப்பு செய்யப்பட்டவனாகவும், ஜெயிது துடரப்பட்டவனாகவும் அல்லாஹ் துயர்ந்தவனாகவும் ஆகிறான்.

மேலும் இந்தக் கேள்விகளுக்கும் என்ன மறுமொழி சொல்லப்படும். அதாவது ஜெயிது என்பவன் அம்று என்பவனைப் பற்றி அவன் பக்று என்பவனுடைய வீட்டுக்குப் போவானேயானால் காரணமில்லாமல் கண்டிப்பாக வெட்டிப்போடுவான் என்று அறிந்தான். மேலும் அம்றை பக்றுடைய வீட்டுக்குப் போகவிடாமல் தடுக்கவும் அவனைக் கட்டிப் போடவும் பூரண சக்தியுடையவனாகவும் இருந்தான். அப்படி இருந்தும் ஜெயிது என்பவன் அம்று என்பவனுக்கு ஆயுதங்களையும் கொடுத்து பக்று என்பவனுடைய வீட்டுக்குள் போகவும் வைத்தான். அம்று பக்றின் வீட்டுக்குள் புகுந்ததும் காரணமில்லாமல் பக்றை வெட்டிப் போட்டானேயானால் அம்றை வெட்டிய இந்த வேலையில் ஜெயிது என்பவன் அம்றுடன் கூட்டானவனில்லையா? வெட்டுவதில் உடந்தையாக இல்லைதான். என்றாலும் அம்றைப் போகவிடாது தடுக்க அவனுக்குச் சக்தி இருந்தும் விட்டுவிட்டான். அத்தோடு வாளையும், ஆயுதங்களையும் தன் கையினாலேயே கொடுத்தான், பின்பு வலுக்கட்டாயமாக அவனைப் பக்றுடைய வீட்டுக்குள் போகவும் வைத்தான். இந்த எல்லா வேலைகளும் செய்வதற்கு உதவியானதாக இல்லையா? அம்று, பக்றை வெட்டியதில் ஜெய்து அம்றுடன் கூட்டானவனில்லையா? சந்தேகமில்லாமல் கூட்டானவன்தான் என்றானால் பின்னர் இங்கு என்ன சொல்வீர்கள்?

அதாவது வெட்டியவனுடைய வெட்டுகிற செயலைப் பற்றி வெட்டியவனைப் படைக்க முன்னாடியே அல்லாஹு தஆலா நன்றாக அறிந்திருந்தான். இன்னும் வெட்டியவனைப் படைத்ததோடு வெட்டியவனுக்குச் சக்தியையும் அவனே கொடுத்தான். பின்னர் வெட்டுப்பட்டவனை வெட்டுண்டு போவதற்கும் செத்துப் போவதற்கும் இலக்காக ஆவதற்கு அவனே இழுத்துக் கொண்டும் விட்டான். இன்னும்

காரணமில்லாது வெட்டியவனுடைய கையினால் வெட்டுப் பட்டவனைச் சாகவும் வைத்தான். மேலும் பின்னால் நிச்சயமாக அல்லாஹ் அடியார்களுக்கு அநியாயக்காரனில்லை என்று முழங்கவும் செய்தான். இப்பொழுது சொல்லப்பட்ட கருமங்கள் அத்தனையும் நீங்களும் ஒப்புக் கொண்டதுதான்! ஆகையினால் இவைகளுக்கு மறுமொழி கொடுப்பதும் இன்னும் அல்லாஹ் குபாடம் செய்கிறவன், மோசம் பண்ணுகிறவன், இவை போன்றவனென்றும் நீங்கள் கேட்ட ஆட்சேபனைகளுக்கும் மறுமொழி கொடுப்பதும் உங்களைப் பொறுத்ததுவேயாகும்.

நாங்கள் அல்லாஹு தஆலாவும் அவனுடைய திருத்தூதர் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவர்களும் இட்ட கட்டளைகளெனும் சங்கிலிகளைக் கொண்டு கட்டப்பட்டவர்களாகும். உங்களையும் நீங்கள் செய்வதையும் அல்லாஹ் படைத்தான் என்ற ஆயத்தைக் கொண்டும் ஈமான் கொள்கிறோம். நீங்கள் நாடுவதில்லை அல்லாஹ் நாடியேயல்லாது என்ற ஆயத்தின் பேரிலும் ஈமான் கொள்கிறோம். இன்னும் உமக்கு வந்து சேரக்கூடிய நன்மைகளாகிறது அல்லாஹ்வில் நின்றுமுள்ளதாகும் என்ற வாக்கியத்தைக் கொண்டும், எவன் ஒரு நன்மை செய்கிறானோ அவனுக்கு அது போன்று பத்து உண்டு என்பதைக் கொண்டும், ஒரு தீமைக்கு அது போன்ற ஒரு தீமையே கூலி என்பதைக் கொண்டும் நல்லடியார்கள் சுவனத்திலும், கெட்ட அடியார்கள் நரகத்திலுமிருப்பார்கள் என்ற ஆயத்தைக் கொண்டும் நாங்கள் ஈமான் கொள்கிளோம். நாங்கள் இந்த ஆயத்துகளுக்கெல்லாம் இவைகளுக்கிடையில் முரண்பாடு ஏற்படாவண்ணம் அவைகளுக்குரிய ஸ்தானங்களையும், இடங்களையும் நன்கு அறிவோம்.

நாங்கள், 'வேதம் பூராவையும் கொண்டு ஈமான் கொள்வார்கள்' என்று அல்லாஹ்வின் திருவசனத்தில் சொல்லப்பட்ட கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். வேதத்தில் சிலதைக் கொண்டு ஈமான் கொண்டு சிலதை நிராகரிப்பவர்களில் நின்றுமுள்ளவர்களல்ல! நன்மை, தீமை, அல்லாஹ்வின் களா கத்றில் நின்றுமுள்ளது என ஈமான் கொள்கிறோம். இன்னும் எங்களுக்கு அல்லாஹ் விதித்ததேயல்லாது எங்களைத் தொடாது அவன் எங்களுடைய நாயன். அல்லாஹ்வின் பேரிலேயே மு.்.மினானவர்கள் பரஞ்சாட்ட வேண்டும் எனச் சொல்லும் என்ற ஆயத்தைக் கொண்டும் ஈமான் கொள்கிறோம். பரஞ்சாட்டுகிறோம். இன்னும் நீங்கள் அவசியம் அறிய வேண்டும். கவனத்தில் வைக்க வேண்டும். மேலே சொல்லப்பட்ட கேள்விகளுக்கு சரியான விடைகள், அல்லாஹ்வை அறிந்த உலமாக்களும், கடாட்ச அறிவையுடைய ஸூபிய்யாக்களுமேயல்லாது வேறு யாரும் சொல்ல மாட்டார்கள்.

அவா்கள்தான் மாா்க்கத்தின் தூண்களாகும். அவா்களைக் கொண்டேதான் இஸ்லாத்தின் நிலைப்பாடும், ஈமானின் உயிருமிருக்கிறது. ஆகையினால் அவா்களிடத்திலேயே சரியான விடைகளையும், அந்தரங்கமான அறிவுகளையும் கற்றுக் கொள்ளுங்கள். அவா்கள் பேரில் இன்காறு செய்யாதீா்கள். உங்களுக்கு நேரான பாதை மறைந்து விடும். அவா்களை இன்காறு செய்வது உங்களை கெட்ட மீளுந்தலத்தளவில் கொண்டு போய்ச் சோ்த்து விடும்.

ஆண்டவா! எங்களுக்கு சத்தியத்தை சத்தியமாகக் காட்டி அதைத் துயா்ந்து நடக்க உதவி செய்! அசத்தியத்தை அசத்தியமாகக் காட்டி அதைத் தவிா்ந்து நடக்கவும் எங்களுக்கு உதவி செய்! நீயே சகல வஸ்துக்களின் பேரிலும் சக்தியுள்ளவனாகும். துஆவை அங்கீகரிப்பதற்கு மிகவும் பாத்தியமானவனுமாகும். நன்மாராயம் கூறுகிறவா்களும், அச்சமூட்டுகிறவா்களுமான எங்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் அவா்கள் பேரிலும், இன்னும் மதிப்பும், சங்கையும், கண்ணியமுமுள்ள அவா்களின் கிளைஞா்கள், தோழா்கள் பேரிலும் அல்லாஹ் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வானாக! ஆமீன்.

முற்றும்.